இலவசம்: சென்னை ஸ்கேன்
சென்னை வாசகர்களுக்கு மட்டும்
KALKI 28.11.2004 ரூ.6.00

# கல்கி



# ஸ்ரீ சத்யசாயி - 79

நவம்பர் 23 – ஸ்ரீ சத்யசாயிபாபா ஜயந்தி

அட்டைப்பட ஓவியம்: மணியம் செல்வன்



# கல்கி

28.11.2004

மடாதிபதிகளை மாற்ற முடியாது – 10,11

கண்ணீரில் கரைந்த கலாம் – 56,57

மன்மதன் -12

அட்டகாசம் -96

சினிமா விமர்சனம்

ஆண்டாள் டு கல்பனா சாவ்லா! 8,9

## வட்டமேஜை



✉ பழைய பாரத நாட்டின் பண்புகளே 'மனோகரா' படத்தின் வெற்றி என்பதை அமரர் கல்கி விளக்கியுள்ளது அருமை.
சென்னை, கே.வி.ராமன்

✉ ஆளுநர் பதவி கேலிக் கூத்தாகிக் கொண்டு வருவதற்கு, அந்தப் பதவியே இல்லாமல் போனால் என்ன என்று தோன்றுகிறது.
பள்ளப்பட்டி, தமுகம்மது அசாருதீன்

முடியாது.
பெரணமல்லூர், சேகரன்

✉ 'சி.பி.ஐ. கூட மத்திய அரசின் ஜால்ராவாகச் செயல்படுகிறது' என்பதை தலையங்கம் படித்தபோது உணர்ந்தோம். ஜனநாயகம் நாளுக்கு நாள் நலிந்து கொண்டிருக்கிறது என்பதற்கு இது முன் உதாரணம்.
மேலகிருஷ்ணன்புதூர்,
பிரபாலிங்கேஷ்

## ஒட்டிக் கொண்ட சின்னஞ்சிறுசு!

✉ கவர்னர் பொறுப்பிலிருந்தும் நழுவாமல், கருணாநிதியுடனான நட்புக்கும் பங்கமில்லாமல்... பாவம் பர்னாலா...! ஃபஸ்ட் கார்ட்டூன் பெஸ்ட்!!
மும்பை, கேஎஸ்.பாலகிருஷ்ணன்

✉ 'இனிது இனிது..' 'ஆயிரம் உண்டிங்கு' சின்னஞ்சிறுகதைகள் நெஞ்சில் ஒட்டிக்கொண்டன.
ஈரோடு, ஆர்.ராஜ்குமாரன்



✉ கல்கியின் கடைசிப் பக்க கார்ட்டூன் நச்சென்றிருந்தது. நடுத்தர இல்லத்தரசிகளுக்குச் சுமையான சமையல் எரிவாயு விலை உயர்வை, இதைவிடச் சிறப்பாக எடுத்துக் காட்ட

✉ 'ஐஷ்வர்யம் வந்தாச்சு' என கஸ்தூரிராஜா குடும்ப அங்கத்தினர்களுடன் அளவளாவி அழகுடன் தந்திருந்த கல்கியின் நேர்காணல், முற்றிலும் மாறுபட்ட கோணம். அத்துடன் 2003

## மந்திர ஜாலம்!




கல்கி தீபாவளி மலரை கையில் எடுத்ததுமே ஒரு தனி குதூகலம். கல்கி மலரின் தனித்தன்மையான வடிவமே ஓர் அற்புதம். அப்புறம் மலரின் பக்கங்களை புரட்டப் புரட்ட எல்லாமே அழகு; எல்லாமே ஆனந்தம்.

தீபாவளி மலரில் கல்கியின் சிறுகதை - குறுநாவலுக்கு பதிலாக கட்டுரையைப் பிரசுரித்திருக்கிறீர்களே என்று கொஞ்சம் மனக்குறையுடன்தான் படிக்க ஆரம்பித்தேன். சிறிது நேரத்தில் கல்கி, டி.கே.சி. சின்ன அண்ணாமலையுடன், நானும் டாகூர் தரிசனத்துக்காக கல்கத்தாவுக்குப் பயணம் செய்ய ஆரம்பித்துவிட்டேன். அதுதான் சார், கல்கியின் மந்திரஜாலம்.

**- சின்னஞ்சிறுகோபு, மயிலாடுதுறை**

நவீன புகைப்படத்தையும் மிஞ்சும் அற்புதத்துடன்,

ஜூனில் பேட்டி தந்திருந்த ஐஸ்வர்யாவின் பேட்டியையும் வெளியிட்டு, அவரது குணா திசயத்தையும் ஒப்பு நோக்க வைத்து விட்டீர்களே!

நெய்வேலி, சாந்தி சுந்தர்

✉ தீபாவளி வரவான 'மன்மதன்' எப்படி யிருக்கும் என்று 'ட்ரீம்ஸ்' கண்டு கொண் டிருந்த எங்களுக்கு, படம் வெளியாவதற்கு முன்பே 'அட்டகாச'மாக விமர்சனம் எழுதி 'நெறஞ்ச மனசோடு' திருப்தி அடைய வைத்துவிட்டீர்கள்.

கந்திருப்பம், க.மோ.சிவா

✉ ரகசிய காப்புப் பிரமாணத்தை ஜெ... மீறியதாகக் கூறும் பிரச்னை குறித்து... தராசு அளித்த பதில்கள் நறுக்... வெடுக்... சுருக்...! உறைக்க வேண்டியவர்களுக்கு



உறைத்தால் சரி...

நெய்வேலி, எஸ்.கண்ணன்

நுணுக்கமான பூஷணின் ஏழு ஓவியங்களும் இந்த வருட கல்கி மலருக்கு சிறப்பை அளிக்கிறது.

**- கே. ராஜேந்திரன்,**
**முடிகண்டநல்லூரர்**

'**அ**திசயத் துளசி' வேதாவின் அட்டைப் பட ஓவியம் வெகு சிறப்பு. புகைப்பட மடல் கள் எல்லாமே அருமை.

சீதா ரவியின் 'ஷ்யாம கிருஷ்ணன்' என்ற சிறுகதையும், அதற்கு ஓவியர் கோபுலு வின் வண்ண உயிரோவியமும் மெல்லிய இசைபோல உணர்வோட்டமாக அமைந்து, மனத்தை மென்மையாக வருடுகிறது.

**- ஆர்.செல்வராணி,**
**மங்கைநல்லூரர்**




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ்**
**பிரைவேட் லிமிடெட்டிற்காக**
**பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.330/-**
**ஆறு மாதம் : ரூ.165/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
**ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்**
**இலங்கை : ரூ.2000/-**

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# பாபா

ஒரு நாள் சாய்பாபாவிடம் ஒரு பெண் வந்து~

சுவாமி, எனக்கு அடிக்கடி கோபம் வருகிறது. எல்லார் மீதும் எரிந்து விழுகிறேன்... நீங்கள்தான் ஒரு வழி சொல்லணும்!

சரி, அதற்கு ஒரு விசேஷ மருந்து உண்டு. நாளைஅதை தயார்செய்து விடுவேன். நாளை வா.

சரி, சுவாமி.

மறுநாள்~

இந்தா, தினமும் மூன்று வேளை குடித்து வா. இன்றே ஆரம் பித்துவிடு. ஒரு வாரத்துக்குப் பிறகு வந்து பார்.

நல்லது சுவாமி.

ஏழாவது நாள்~

நீங்கள் தந்த மருந்து பிரமாதமாக வேலை செய்கிறது! இந்த வாரம் எனக்குக் கோபமே வரவில்லை. ரொம்ப நன்றி சுவாமி.

அந்த மருந்தில் அப்படி என்ன இருக்கிறது, நான் தெரிந்து கொள்ளலாமா சுவாமி?

அம்மா... அது மருந்தல்ல! சாதாரண நீர்தான்! உன் கோபத்தைப் போகச் செய்தது நீ என்மீது வைத்த நம்பிக்கைதான். நம்பிக்கையே வாழ்வின் ஆதாரம்.

நம்பிக்கை வைத்தால் கல்லும் தெய்வமாகத் தெரியும். முழுமையான நம்பிக்கைக்கு மறு பெயர்தான் சரணாகதி என்பதை நாம் உணர வேண்டும்!



## ஆசிரியர் பக்கம்

இன்டர்நெட்டில் வலம் வந்து கொண்டிருக்கும் ஜெர்ரியின் கதை இது:

ஜெர்ரி, அமெரிக்காவில் ஒரு சராசரி உணவு விடுதியில் சர்வர் வேலை பார்ப்பவன். அவனுடைய கலகலப்பும் சுறுசுறுப்பும், எப்போதும் தனித்துத் தெரியும்.

ஒரு சமயம் ஜெர்ரியிடம் அவனுடைய



# ஜெர்ரியின் கதை

உற்சாகத்தின் ரகசியம் என்ன..? என்று சிலர் கேட்டார்கள்.

"காலையில் எழுந்திருக்கும்போது எனக்கு நானே பேசிக் கொள்வேன்: 'அடேய்! இன்றைய தினம் உற்சாகமாயிருப்பதோ, உம்மணாம் மூஞ்சியாய் இருப்பதோ, உன் கையில்தான் இருக்கிறது... ஆகவே, இன்றைக்கு என்ன நடந்தாலும் நான் ஜாலியாக எதிர்கொள்ளப் போகிறேன்' என்று சொல்லிக் கொள்வேன். அப்படியே இருந்து விடுவேன்."

தன்னம்பிக்கைத் திலகமாக வாழ்ந்த ஜெர்ரி ஒரு நாள் தவறு இழைத்தான். தான் வேலை பார்த்த ஹோட்டலின் பின் கதவை பூட்ட மறந்து, உள்ளேயே தூங்கிப் போனான். இரவு திருடர்கள் வந்து கல்லாவில் இருந்ததைச் சுருட்டிக் கொண்டார்கள். அவசர ஆத்திரத்தில் ஜெர்ரியைச் சுட்டுவிட்டு ஓடிவிட்டார்கள்.

போலீஸ் வந்தது. ஜெர்ரி மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப்பட்டான். அவனை ஆராய்ந்த மருத்துவக் குழுவினரின் கண்களில், அவநம்பிக்கை கொள்ளை கொள்ளையாகத் தொக்கி நின்றது.

அதை விழுங்கிவிட்டு ஒரு நர்ஸ் ஜெர்ரியைக் கேட்டார்: "உங்களுக்கு எந்தப் பொருளாவது அலர்ஜி ஏற்படுத்துமா?"

– சிகிச்சை அல்லது ஆபரேஷன் ஆரம்பிக்கும் முன் கேட்கப்படும் வழக்கமான கேள்வி இது.

"ஒரே ஒரு அலர்ஜி உண்டு..." என்றான் ஜெர்ரி மூச்சைப் பிடித்துக் கொண்டு... "துப்பாக்கித் தோட்டாக்களைக் கண்டால் அலர்ஜி.... அவற்றை உடனே என் உடம்பிலிருந்து அகற்றுங்கள்... நான் வாழ வேண்டும்!", என்றான்.

மருத்துவக் குழு கொல்லென்று சிரித்துவிட்டுப் பணியில் இறங்கியது. ஜெர்ரி உயிர் பிழைத்தான்.

பிறிதொரு சமயம் ஜெர்ரியிடம் கேட்டார்கள், "சுடப்பட்ட கணத்தில் நீ எப்படி உணர்ந்தாய்?"

ஜெர்ரி சொன்னான்: "கொல்லைக் கதவை நான் பூட்டாமல் போனது, எவ்வளவு பெரிய தப்பு என்று உடனே நினைத்துக் கொண்டேன். மறுகணமே, இந்த அனுபவத்தை விவரிக்க நான் உயிர் வாழ்ந்தே தீர வேண்டும் என்று முடிவு செய்தேன்... இதோ விவரித்துக் கொண்டிருக்கிறேன்..."

களவு போன தொகையை, உழைத்துச் சம்பாதித்து ஈடு செய்து விட்டான் ஜெர்ரி.

ஒவ்வொரு நாளும் எப்படி அமையும் என்பது நம் கையில் இல்லை... ஆனால் ஒவ்வொரு நாளின் ஒவ்வொரு நிகழ்வையும், எவ்வாறு எதிர்கொள்வது என்பது நம் கையில்தான் இருக்கிறது.

இந்தக் கதையைப் படித்துவிட்டு கல்கி இதழை மூடி வைப்பதா, அல்லது இன்னொருவருடன் இதைப் பகிர்ந்து கொள்வதா என்பது... உங்கள் கையில்தான் இருக்கிறது!

# அண்ணனும் நோக்கியா அவளும் நோக்கியா

**அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் 'கொய்ங் கொய்ங்' என்று சத்தமிட்டுக் கொண்டே நிறைந்திருக்கின்றன செல்பேசிகள். இவற்றால் நமக்கு ஏற்படும் நன்மைகள் மற்றும் சிக்கல்கள் பற்றிய சிறப்புப் பார்வை.'**



● முள்ளங்கி, கேரட் போல கூறு போட்டுக் கூவி, கூவி செல்ஃபோன் விற்கிறார்கள். "காசில்லை வேணாம்ப்பா" என்றால் அடம் பிடிக்கிறார்கள். "பரவாயில்லை சார், மாசா மாசம் கொடுங்க. இப்போதைக்கு கையில எவ்ளோ சேஞ்ச் வச்சிருக்கீங்க?'' என்று கேட்டு, புது செல்பேசி ஒன்றைக் கொடுத்துவிடுகிறார்கள். ப்ரீ பெய்ட், போஸ்ட் பெய்ட், க்வார்ட்டர் பெய்ட், செமி பெய்ட் என்று கலபமான கட்டண முறைகள் வேறு.

● நமக்காவது தீபாவளிக்கு ஒருமுறை சட்டை எடுத்தால் போதும். ஆனால் இந்த வஸ்துவுக்கு அடிக்கடி சட்டை மாற்றிக் கொண்டேயிருக்க வேண்டும். மழையில் நாம் நனைந்து, ஒருவேளை ஜன்னி வந்தாலும் பரவாயில்லை. ஆனால் செல்பேசி நனைந்து விடக் கூடாது. அப்புறம் அதற்கு ஷாக் ட்ரீட்மெண்ட் கொடுத்து, தட்டித் தட்டி தான் உயிர் தேற்ற வேண்டும். இதனால் தானோ என்னவோ, சிலர் இதற்கு கை வைத்த கம்பளி, மங்கி கேப் எல்லாம் போட்டு விட்டிருப்பார்கள். ரொம்ப குளிரடித்தால் சிறிது விக்ஸ் கூட தேய்த்து விடுகிறார்கள்.

● முழு செங்கல் அளவு கனமாக இருந்த செல்பேசி, எந்த மாதிரியான டயட்டில் இருந்ததோ தெரியவில்லை. நெய் பிஸ்கட் போல இலேசாகிவிட்டது. ஆனாலும், "திஸ் இஸ் வெரி ஹெவி யா'' என்று வாய் கூசாமல் குறைப்பட்டுக் கொள்பவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

● ட்ராஃபிக்கில் சிவப்பு விழுந்தவுடன் ஜம்மென்று வண்டியை ஓட்டிக் கொண்டிருக்கும் அண்ணலை நிறுத்தி, "யோவ், மரியாதையா ஃபைன் கட்டு'' என்றால், ''அப்படியெல்லாம் சொல்லாதடா செல்லம்'' என்கிறார். திரு திருவென்று விழித்த போலீஸ்காரர் அருகே சென்று பார்த்தால் அண்ணல் நோக்கியாவிடம் கொஞ்சிக் கொண்டிருப்பது தெரிந்தது. இன்டென்ஸிவ் கேரிலிருந்து அப்படியே ஓடி வந்து போல, இடுப்பிலிருந்து வாய் வரை மெலிதாக ஒயர் கனெக்ஷன்.

● கால்குலேட்டர், காமிரா, டைப் ரைட்டர், எமர்ஜென்சி லேம்ப், ரேடியோ மிர்ச்சி, ஹாட்மெயில் என்று போஷாக்குடன் வளர்ந்து வருகிறது செல்பேசி. கூடிய விரைவில் மாவு அரைப்பதற்கும், மீசை நறுக்குவதற்கும், அரிசியில் கல் பொறுக்குவதற்கும், ஆடு மேய்ப்பதற்கும் கூட பயன்படும் என்று நிச்சயம் நம்பலாம்.

**- மருதன்**

"ஐயங்காராத்து மாமி கட்டிக்கிற மடிசாரை நவ்யாவுக்குக் கட்டிவிடணும். நீங்க கட்டி விட்டிருக்கிறது ஐயர் மடிசார் கட்டு. முதல்ல இதை மாத்திக் கட்டுங்க..." என்று காஸ்ட்யூமர் மாசானத்தை, இயக்குநர் வேதம்புதிது கண்ணன் இலேசாகக் கடிந்து கொண்டார்.

உடனே வடபழனி முருகன் கோவில் அருகில் உள்ள ஒரு வீட்டிலிருந்து, அமிர்தா என்ற ஐயங்கார் மாமியை நவ்யா நாயருக்குப் புடைவை கட்டிவிட அழைத்து வந்துவிட்டார்கள். ஐந்தே நிமிடத்தில் அந்த மாமி நவ்யாவுக்குப் புடைவை கட்டிவிட, இயக்குநர் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்.

"அழகிய தீயே...' படத்துக்குப் பிறகு நிறைய இயக்குநர்கள் கேரளாவுக்கே வந்து கதை சொன்னார்கள். எதுவுமே எனக்குப் பிடிக்கவில்லை. 'வேதம் புதிது' கண்ணன் என்னிடம் 'அமிர்தம்' படத்தின் கதையை ரத்தினச் சுருக்கமாக தொலைபேசியிலேயே கூறினார். எனக்கு மிகவும் பிடித்துவிட்டது. உடனே ஓ யெஸ் சொல்லிவிட்டேன். கதைப்படி நான் கோயில் பட்டாச்சாரின் (கிரீஷ் கர்னாட்) மகள். ஆண்டாள் போல் வாழ நினைக்கும் என்னை, பகுத்தறிவாதியான இளைஞன்



ஒருவன் கல்பனா சாவ்லாவாக மாற்றுகிறான். கூடவே மெல்லிய ரம்மியமான காதல் கதையும் இழை யோடுகிறது. நடிப்புக்குச் சவால் விடும் காரக்டர்" என்றார் சங்கீதமாக!

- எம்

ஸ்ரீ ஜயேந்திரர் கைதானதைத் தொடர்ந்து 'மடத்தை அரசு எடுத்துக் கொள்ள வேண்டும்" என்ற கோஷம் எழுந்தது. ஆனால் ஜெயலலிதா, "அரசுக்கு அது போன்ற எண்ணம் இல்லை" என்று சட்டமன்றத்தில் சொல்லியிருக்கிறார். சட்டப்படி மடங்களை அரசு எடுத்துக் கொள்ள முடியுமா? கோயில், மடம் சம்பந்தப்பட்ட வழக்குகளில் ஆஜராகும் சில வழக்கறிஞர்களிடம் பேசினோம்.

"ஒரு மடாதிபதிக்கு இரண்டு விதமான செயல்பாடுகள் உள்ளன. ஒன்று மத ரீதியானது; மற்றொன்று மதச்சார்பற்ற நிர்வாக ரீதியானது.

மத ரீதியானது என்றால், மடாதிபதியின் குரு கடைப்பிடித்து வந்த பூஜை, புனஸ்காரங்களைத் தொடர்ந்து செய்வது, வேத பாட சாலைகள் நிறுவுவது, நடத்துவது, கும்பாபிஷேகங்கள், ஆன்மிகப் பணிகள் போன்றவை.

மதச்சார்பற்றது என்றால், மடத்துக்குச் சொந்தமான நிலங்கள், கட்டடங்களைக் குத்தகைக்கும், வாடகைக்கும் விடுவது, பணம் வசூலிப்பது, மற்றும் அன்றாட நிர்வாகத்தைக் கவனிப்பது, வரவு செலவு கணக்குகளைக் கண்காணிப்பது என்று பல பணிகள்.

இந்து சமய அறநிலையச் சட்டம் (1959) என்ன சொல்கிறது...?

மதச் சார்பற்ற அதிகாரங்களை அரசு நீக்கி விடலாம். அவற்றைக் கவனிக்க நிர்வாகி ஒருவரை நியமிக்கலாம். ஆனால் மத அடிப்படையில் ஒரு பாரம்பரியத்தைக் கடைப்பிடித்து வரும் அவரது செயல்பாடுகளில் அரசு ஒரு போதும் தலையிட முடியாது. அவர் காலம் வரையில் அந்தப் பொறுப்பு அவருடையதே" என்று சொல்கிறார் ஸீனியர்



வழக்கறிஞர் செல்வராஜ்.

"மடம் சம்பந்தப்பட்ட வழக்குகளில் மிக முக்கியமானதாகக் கருதப்படுவது ஷிரூர் (கர்நாடகா மாநிலம்) மடத்தின் வழக்கு" என்றார் ஸீனியர் வழக்குரைஞர் ராமசாமி. இவர் அறநிலையத் துறையைப் பற்றிப் புத்தகம் எழுதியுள்ளார்.

"1950களில் நடந்த நீண்ட சட்டப் போராட்டம் இது. அதன் முடிவில் சுப்ரீம் கோர்ட் சொன்னது இதுதான்: "மடம் மக்கள் சம்பந்தப்பட்ட விவகாரம் என்பதால், அரசு அதன் செயல்பாட்டைச் சீர்திருத்தத் தலையிடலாம். மடாதிபதியை மாற்றவும் முற்படலாம்..." இது தீர்ப்பின் சாராம்சம்.

ஆனால் சமீபத்தில் கர்நாடகாவில் பெஜாவர் மடத்தை மாநில அரசு எடுத்துக் கொள்ள முற்பட்டபோது, விவகாரம் உயர்நீதி மன்றத்துக்குச் சென்றது. "சட்டப்படி அது சரியல்ல" என்ற உயர்நீதிமன்றம் சொல்லிவிட்டது என்கிறார் வழக்கறிஞர் சத்தீஷ் பராசரன்.

சட்டப் பிரிவுகளில் அரசு அதிகாரங்கள் மற்றும் மடத்து உரிமைகள் ஆகியவை பற்றி, உறுதியாகச் சொல்லாத சில வெற்றிடங்கள் இருப்பதால் இருதரப்புமே அதன் கீழ் பாதுகாப்புப் பெற வாய்ப்பு உண்டு.

"மடங்களுக்கும் தணிக்கை உண்டு, மடத்துச் சொத்துக்களை - ஐயாயிரம் ரூபாய்க்கு மேல் மதிப்பு இருக்கும் பட்சத்தில் - விற்பதற்கும் வாங்குவதற்கும் அரசு அனுமதி வேண்டும். மடத்தில் தட்டுகளில் போடப்படும் பணத்தையும் வருமானத்தில் சேர்த்துக் கணக்குக் காட்ட வேண்டும். "ஆனால் நடைமுறையில் அரசு அல்லது அரசியல் செல்வாக்கு உள்ள மடங்களில் நடக்கும் முறைகேடுகளைக் கண்டும் காணாமலும் இருப்பதும், கொஞ்சம் பலவீனமாக உள்ள மடங்களை ஆட்டி வைப்பதும், அதிகாரிகளின் வழக்கம்" என்கிறார்கள் சில வழக்கறிஞர்கள்.

"கோயில் சொத்துக்களைக் கொள்ளையடித்துப் பழக்கப்பட்ட நமது அரசியல்வாதிகளுக்கு, மடங்களின் சொத்துக்கள்மேல் எப்போதும் ஒரு கண் உண்டு. எனவே மடத்து விவகாரங்களில் மூக்கை நுழைக்கும் வகையில் சட்டங்களை வளைக்க அரசியல்வாதிகள் முற்பட்டால் ஆச்சரியமில்லை.

- ப்ரியன்

படம் : மீடியா ராமு

# மடாதிபதிகளை மாற்ற முடியாது!

# மன்மதன்

சீரியல் கில்லர் சினிமாக்கள், தமிழ்ப் பட உலகுக்குப் புதிதல்ல. மன்மதனும் ஒரு தொடர் கொலையாளிதான். ஆனால் புதுமையானவன். புதுமை என்றால், துப்பாக்கி, கத்தி கபடாக்களைக் கீழே போட்டுவிட்டு, தொழில்நுட்பம், திரைக் கதை இரண்டையும் பெரிய ஆயுதங்களாக, கையிலெடுத்துக் கொண்டு ரசிகர்களை பொட்டில் அடித்து உட்கார வைக்கும் நவயுகப் புத்திசாலி.

போன் கலெக்டர் உள்ளிட்ட பல ஹாலிவுட் ஆங்கிலப் படங்களின் கதைகளை நினைவூட்டினாலும், அத்தனை சீக்கிரம் யூகித்துவிட முடியாத திருப்பங்கள் நிறைந்த திரைக்கதை, கத்தியின்றி, ரத்தமின்றி வசீகரிக்கிறது. இசைக் கல்லூரி மாணவர் மதன் (சிம்பு) மீது, மயிலறகு மனசு கொண்ட மைதிலிக்கு (ஜோதிகா) காதல். காதலைச் சொல்லும் முன்பே அவரைப் போலீசிடம் பிடித்துக் கொடுக்கிறாள். 'ஆனால் கொலையாளி நானல்ல' என்று நிரூபித்துவிட்டு வெளியே வருகிறான் மதன். "உன்னைப் போய் தப்பா நினைச்சிட்டேனே...!" என்று உருகும் மைதிலி, நீதிமன்ற வளாகத்திலேயே தனது காதலைச் சொல்கிறார். மதனோ ஏற்க மறுக்கிறான். காரணம், கொலையாளி அதே மதன்தான். எப்படி என்பதில்தான் சொக்குப் பொடி போட்டு, ரசிகர்களை சிக்க வைத்திருக்கிறார்கள்.

வைஷ்ணவி மாதிரி பாத்திரங்கள் நிஜ வாழ்வில் வெகு சிறுபான்மை என்றாலும், அதை சித்திரித்த விதம், மைதிலி பாத்திரத்தின் மூலம் அதை பேலன்ஸ் செய்திருக்கும் நேர்மை, இரண்டுக்காகவும் கதாசிரியரை வலிக்கும் வரை கைகுலுக்கலாம். கிராமத்து மதன் ராஜ், நகரத்து மதன் குமார் பாத்திரங்களை ஏற்று, தோற்றம் உடல்மொழி, வசன உச்சரிப்பு, அனைத்திலும் வேறுபாடுகளை வெளிப்படுத்தியிருக்கும் சிம்புவின் உழைப்பு கண் கூடு.

மன்மதனை ரசிக்கலாம். குடும்பத்தோடு அல்ல.

- விஷுவல்தாசன்

● அபவ் ஆவரெஜ்




## காஞ்சி மடத்தைக் காப்பாற்றுங்கள்!

**கா**ஞ்சி மடத்தை ஹிந்து அறநிலையத் துறையின் கட்டுப்பாட்டுக்கு மாற்றவேண்டும் என்று கருணாநிதி பேசி வருவது ஏற்புடையதல்ல. இதே கருத்தை ஒரு பிரசாரமாக, தி.மு.க. சார்புள்ள சன் டீ.வி, வலிந்து வலிந்து செய்து வருவதோ அபாயகரமானது, ஒருதலைபட்சமானது.

அரசு தரப்பிலும் சரி, காவல் துறை சார்பிலும் சரி, ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் மீதான குற்றச்சாட்டுக்கு வலுவான ஆதாரங்கள் இருப்பதாகவே சொல்லப்பட்டு வருகிறது. எனினும் வழக்கு முடிகிற வரையில் எந்தவித முன் தீர்மானத் துக்கும் வருவதற்கில்லை.

குறிப்பாக, காஞ்சி மடத்தின் கட்டுப்பாடு அரசிடம் மாற வேண்டும் என்கிற சிந்தனை, வழக்கின் போக்கு எப்படிச் சென்றாலும் ஏற்றுக் கொள்ள முடியாதது.

காஞ்சி மடம் என்பது ஆதி சங்கரரால் நிறுவப்பட்டு, பல்வேறு ஆசார்யர்களால் பக்தி சிரத்தையுடன் வளர்க்கப்பட்ட அமைப்பு. (ஆத்திகத்தையே மறுக்கும் தி.க. அமைப்பினர், காஞ்சி மடம் ஆதி சங்கரரால் ஸ்தாபிக்கப்படவில்லை என்று இந்த நேரத்தில் வாதிடுவது நகைப்புக்கிடமானது!) சங்கர மடத்தின் நியமங் களும், சந்திரமௌளீஸ்வரர் பூஜையும் உலக நன்மைக்காக



# கல்கி



2004 நவம்பர் 28
தாரண கார்த்திகை 13
மலர் : 63
இதழ் : 18

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - *பாரதியார்.*




இடைவிடாது நடைபெற்று வருகின்றன. ஆழ்ந்த இறை நம்பிக்கை, மற்றும் நியமங்களில் நம்பிக்கை கொண்டவர்களால் மட்டுமே, அவற்றை முறைப்படியும், பக்தி சிரத்தையுடனும் நடத்த முடியும்.

அறநிலையத் துறையின் கட்டுப்பாட்டுக்குச் சென்றால் மடத்தின் நியமங்களுக்கும் பூஜைக்கும் கேடு வரும். ஆலயங்களின் நிர்வாகம் அறநிலையத்துறையிடம் மாறிய பிறகு, மேம்படுவதற்குப் பதிலாகச் சீர்குலைந்துதான் போயிருக்கிறது. ஆட்சியில் அமரும் கட்சிகளின் தனிப்பட்ட ஆத்திக / நாத்திக கொள்கைகளால் தமிழக ஆலயங்களின் நிர்வாகமும், நியமங்களும் படாத பாடு பட்டிருக்கின்றன. அவற்றின் சொத்துக்கள் சுரண்டப்படுவதும், அதற்கு நிர்வாகிகள் துணை போவதும் சகஜமாயிருப்பதை நாம் அறிவோம். அரசே ஒரு கட்டத்தில் இந்தச் சீர்கேட்டை ஆராய கமிஷன் அமைத்ததும், அந்த கமிஷனின் சிபாரிசுகள் புழுதியடைந்து கொண்டிருப்பதும் பழங்கதை.

காஞ்சி சங்கர மடத்துக்கு அந்த கதி வருவதற்கு அனுமதிக்கலாகாது. மடத்தின் நியமங்கள், வேதாந்திகளாலும் வேத வித்துக்களாலும் வகுக்கப்பட்டவை என்றால், அவற்றின் சொத்துக்கள் பக்தியும் நம்பிக்கையும் கொண்ட ஆஸ்திக அன்பர்களின் கொடையால் உருவானவை. அவை முறையாகவும், வழங்கிய அன்பர்களின் நம்பிக்கைக்கு பங்கமில்லாமலும் பயன்படுத்தப்பட வேண்டும். வேத பாட சாலைகள் நடக்க வேண்டும் என்று விரும்பி வழங்கப்பட்ட தொகை, வகை தொகையின்றி அரசு ஊழியர்களுக்கு ஊதியம் வழங்கவோ, வேறு விதங்களிலோ செலவிடப்பட்டால், அது அநீதியாகும்.

கருணாநிதியும் பிற நாத்திகக் கட்சியினரும் கூறுவதுபோல், காஞ்சி மடத்தின்




நிர்வாகத்தை அறநிலையத்துறை எடுத்துக்கொள்ள, தமிழக அரசு ஒரு போதும் அனுமதிக்கக் கூடாது.

"ஜயேந்திரரைக் கைது செய்ய வலுவான காரணங்கள் உண்டு" என்று சட்டசபையில் பேசியிருக்கும் தமிழக முதல்வர், "காஞ்சி மடத்தின் பணிகளில் அரசு குறுக்கிடாது" என்கிற உறுதி மொழியையும் வெளியிட்டிருப்பது வரவேற்கப்படவேண்டிய விஷயம்.

முதல்வரின் இந்த உறுதிமொழிக்கு வலுவும் நியாயமும் சேர்க்கும் வகையிலும், கருணாநிதி முதலானோரின் கூக்குரலை அடக்கும் வகையிலும், ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் சங்கர மடத்தின் தலைமைப் பொறுப்பை, வழக்கு முடியும்வரை ஏற்பதாக உறுதிபட அறிவிக்க வேண்டும்.

ஜயேந்திரர் ஜாமீனில் வெளியே வந்தால் கூட, வழக்கில் இறுதித் தீர்ப்பு வரும்வரை மடத்தின் நிர்வாகத்தில் தலையிடாமல் ஒதுங்கியிருந்து, விஜயேந்திரரிடம் பொறுப்புகளை ஒப்படைக்க வேண்டும்.

மடத்தின் நிர்வாகத்தைத் திறம்பட நடத்தக் கூடிய நேர்மையான நபர்களை மட்டும் துணையாகக் கொண்டு விஜயேந்திரர் பணிகளைத் தொடர வேண்டும். நேர் அல்லது மறைமுகக் குற்றச்சாட்டுக்கு உள்ளாகியிருப்போர் யாவரையும் - அவர் நெருங்கிய உறவினரே ஆனபோதிலும் - உடனே விலக்கி வைத்து, நெருப்பாக அவர் விளங்க வேண்டும்.

இது மட்டும் நடக்காவிட்டால், காஞ்சி மடத்தின் எதிர்காலம் குறித்து, முதலைக் கண்ணீர் வடிக்கிற நாத்திகவாதிகளின் வாதத்துக்கே பலம் சேரும். அப்படியொரு நிலை உருவாகாமல் இருப்பது, ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் கையில்தான் இருக்கிறது. ○



# ஸ்ரீ சாயி அமுதம்!

மூன்று வகையான மனிதர்கள் இருக்கிறார்கள். கடவுள் நம்பிக்கை உள்ளவர்கள், கடவுள் நம்பிக்கை அற்றவர்கள், கடவுளைப் பற்றிய லட்சியம் இல்லாதவர்கள் என்று. உதாரணத்துக்கு செடியில் ஒரு மலர் இருக்கிறது. அதன் இனிய சுகந்தம் வருகிறது என மலரைத் தேடிப் போகிறவர்கள், கடவுள் நம்பிக்கை உடையவர்களைப் போல நடந்து கொள்பவர்கள். இவர்களை ஆஸ்திகர்கள் எனக் கொள்ளலாம். சிலர் வாசத்தை மட்டும் அனுபவித்து விட்டு, எங்கிருந்து வருகிறது என்பதை அலட்சியம் செய்பவர்கள், கடவுளைப் பற்றிய லட்சியம் இல்லாதவர்கள் என்ற ரகத்தைச் சேர்ந்தவர்கள். மற்றும் சிலர் வாசத்தையும் அனுபவிப்பதில்லை. மலரைப் பார்க்கவும் முயலுவதில்லை. இவர்களை கடவுள் நம்பிக்கை அற்றவர்களின் வரிசையில் சேர்க்கலாம்.

உண்மையில் நாத்திகர்கள் என்று யாரும் இல்லை. ஏனெனில் தன் மேல் நம்பிக்கை இல்லாதவர்கள் யாரும் இல்லை. தன்னை நம்புபவர்கள் எல்லோருமே ஆத்திகர்கள்தான்.

WARNE-
GILCHRIST
POSTER

CHRISTMAS
SPECIAL FEATURES

NEWS FROM
POTTER WORLD



GOKULAM

The magazine for children

December 2004

Rs.8/- only

பங்குச் சந்தை டிப்ஸ்

# நம்பிக்கை நட்சத்திரங்கள்!

'டிப்ஸையெல்லாம் போதும் ஸார். எந்த மாதிரியான பங்குகளை வாங்கலாம் என்று தேங்காய் உடைத்தது போல சொல்லி விடுங்களேன்' என்று கேட்கிறீர்கள் இல்லையா?

இந்தியாவின் எதிர்கால பொருளாதார வளர்ச்சியை மனத்தில் கொண்டு, கீழ்க் கண்ட துறைகளில் உள்ள கம்பெனிகளின் செயல்பாடுகள் சிறப்பாக இருக்க வாய்ப்புண்டு என்று சொல்லலாம்!

தகவல் தொடர்பு, இரும்பு உற்பத்தி, மோட்டார் கார்கள், அவற்றுக்கென உதிரி பாகங்களை உற்பத்தி செய்யும் நிறுவனங் கள், சிமெண்ட், கட்டுமானத் தொழில், பெட்ரோல், பெட்ரோலியப் பொருள்கள், ஜவுளி, வங்கிகள், மருந்து தயாரிக்கும் நிறுவனங்கள், டயர் உற்பத்தி செய்யும் நிறு வனங்கள், விவசாயத்துக்குத் தேவையான உரம் மற்றும் இதர பொருள்களை உற்பத்தி செய்யும் கம்பனிகள் போன்றவை லாபகரமாகச் செயல்படும் வாய்ப்புகள் மிக மிக் அதிகம்.

இந்த முறையில் பரிசீலனை செய்யப்பட்டால், கீழ்க்கண்ட கம்பெனிகளின் பங்குகள் எதிர்காலத்தில் கவர்ச்சிகரமாக விலை ஏறக்கூடிய வாய்ப்புள்ளது.

இன்ஃபோஸிஸ், விப்ரோ, சத்யம் கம்ப்யூட்டர்ஸ், டாடா ஸ்டீல், டாடா மோட்டார்ஸ், டிசிஎஸ், சுந்தரம் ஃபாஸனர்ஸ், சுந்தரம் மோட்டார்ஸ், பஜாஜ் ஆட்டோ, பாரத் டெலிஃபிலிம், ஏசிசி, குஜராத் அம்புஜா சிமெண்ட்ஸ், லார்ஸன் அண்ட் டூப்ரோ, எச்.பி.சி.எல், ஓ.என்.ஜி.ஸி, டாக்டர் ரெட்டீஸ் லேப்ஸ், ஃபைஸர், எஸ்.பி.ஐ, கார்ப்பரேஷன் வங்கி, ஐசிஐசிஐ, எச்டிஎஃப்சி, எச்டிஎஃப்சி வங்கி, கிளாக்ஸோ ஃபார்மா போன்றவை பங்குச் சந்தை வானத்தில் மின்னும் சில நம்பிக்கை நட்சத்திரங்கள். உங்கள் கணிப் பைப் பொறுத்து முதலீடு செய்து வையுங் கள்!

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும், பங்குச் சந்தையின் முன் னேற்றத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. என்னென்ன துறைகள் வளர்ச்சி கண்டால் இந்தியப் பொருளாதாரம் உயரும்?

அடுத்த வாரம் பார்ப்போம்.

**- வி. கோபாலன்**



அந்த நாள் ஞாபகம் 4

# திரையுலக நினைவுகள்



* தெய்வப் பிறவி - படத்தில் சிவாஜி., பத்மினி, எஸ்.எஸ்.ஆர்.



* மாமியார் மெச்சிய மருமகள் - படத்தில் லலிதா, ஜி.வரலட்சுமி, எஸ்.எஸ்.ஆர்., எம்.என்.ராஜம்

# முதல் சம்பளம்!

என் பள்ளிக்கூட நாட்களில் - குறிப்பாக 1957ல் எஸ்.எஸ். எல்.சி. படித்துக் கொண்டிருந்தபோது மாணவர் தலைவனாக இருந்தேன். படிப்பைவிட பொது வேலைகளில் ஈடுபாடு அதிகமாக இருந்தது. அதிலும் அந்த ஆண்டு எங்கள் பி.எஸ். உயர்நிலைப் பள்ளியின் பொன்விழா ஆண்டாக அமைந்து போனதால், அதற்கான நிகழ்ச்சிகளின் மீதே நாட்டம் கொண்டிருந்தேன். எஸ்.எஸ்.எல்.சி.யில் வெற்றி பெறவில்லை.

"ஏதாவது டுடோரியல் கல்லூரியில் சேர்ந்து படியேன்" என்றார் என் தந்தை. எனக்கு டுடோரியலில் படிப்பது பிடித்தமானதாக இல்லை. "இல்லை அப்பச்சி, நான் டுடோரியலில் படிக்கவில்லை" என்று சொல்லிவிட்டு, கோபாலபுரம் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து எஸ்.எஸ்.எல்.சி. படித்து மீண்டும் தேர்வு எழுதினேன்.

கோடை விடுமுறையின்போது பொழுது போகாமல் போர் அடித்ததால், எங்கள் ஸ்டுடியோவுக்கு அருகில் இருந்த எங்கள் பிரிண்டிங் பிரஸ்ஸுக்குப் போகத் தொடங்கினேன். அப்போது வடபழனி பிரஸ் அச்சகத்தை, என் மைத்துனர் அருண் வீரப்பன் பொறுப்பேற்று கவனித்து வந்தார். தினமும் அங்கே போய் அவருடன் இருந்து என்ன நடக்கிறது என்பதைக் கூர்ந்து கவனிப்பது, சில சமயங்

களில் மெஷின் ஓட்டக் கற்றுக் கொள்வது, என்று கோடை விடுமுறையைக் கழித்துக் கொண்டிருந்தேன்.

"என்ன பண்றே?" என்று என்னை ஒரு நாள் அப்பச்சி கேட்டார்.

தினமும் பிரஸ்ஸுக்குப் போய் வந்து கொண்டிருப்பதைச் சொன்னேன்.

"தப்பு. மாப்பிள்ளை வேலை செய்யற இடத்துக்கு நீ போகக் கூடாது. இனி அப்படிச் செய்யாதே. நாளையிலிருந்து நீ ஸ்டுடியோவுக்கு வா. நான் ஒரு லிஸ்ட் தர்றேன். கார்ப்பெண்ட்டர்ஸ் லிஸ்ட். அதில் ஸ்டுடியோவில் எந்தெந்த இடத்தில் மர வேலைக் கலைஞர்கள், யார் யார் இருக்கிறார்கள் என்ற விவரம் இருக்கும். நீ அந்த லிஸ்டை எடுத்துக் கொண்டு அந்தந்த இடங்களுக்குப் போய், அங்கே தச்சர்கள் இருக்காங்களா, ஒழுங்கா வேலை செய்யறாங்களான்னு சூபர்வைஸ் பண்ணு" என்றார்.

அதே போல் செய்தேன். ஆனால் அந்த வேலை எனக்குப் பிடிக்கவில்லை. எனக்கென்று உட்கார ஓர் அறைகூட இல்லை. கையில் லிஸ்ட்டை வைத்துக் கொண்டு சுற்றிச் சுற்றி வருவது அலுப்பாக இருந்தது.

அப்போது எங்கள் நிறுவனத்தில் புரொடக்ஷன் அண்ட் ஸ்டுடியோ எக்ஸிக்யூடிவ்வாக வாசுமேனன் என்பவர் இருந்தார். 1958 ஏப்ரல் 8ம் தேதியன்று அவர் தமது வேலையை ராஜினாமா செய்தார். பின்னர் அவர் சொந்தமாக வாசு ஃபிலிம்ஸ்,

**வாசுமேனன் வேலையை இனிமே சரவணன்தான் பாக்கப் போறான்**



ஏவி.எம்.சரவணன்

வாகு ஸ்டுடியோஸ் என்றெல்லாம் ஆரம்பித்து 'கைராசி' போன்று பல படங்களைத் தயாரித்தார்.

ஏப்ரல் 8ம் தேதி வாகமேனன் ராஜினாமா செய்ததும், மறுநாள் நான் நேராகச் சென்று அவரது நாற்காலியில் அமர்ந்து கொண்டேன். வரவு செலவு வவுச்சர்களை நானே பார்க்கத் தொடங்கினேன். அங்கே இருந்தவர்களுக்கு ஆச்சரியம். "என்ன இது! ஸ்கூல் பையன் வவுச்சர்ஸ் பார்க்கிறானே" என்று கூடி நின்று பேசிக் கொண்டார்கள்.

அதற்கு மறுநாள் பத்தாம் தேதி காலை, வீட்டில் அப்பச்சி மாடியில் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது, அவரிடம் சென்று வாகமேனன் நாற்காலியில் நான் அமர்ந்து கொண்டதையும், வவுச்சர்கள் பார்த்ததையும் தெரிவித்தேன்.

"நோ... நோ...நீயாகப் போய் அப்படியெல்லாம் தன்னிச்சையாக எதையும் செய்யக் கூடாது. சரி... நீ இப்ப என்னுடன் டிபன் சாப்பிடு" என்றார்.

முடிந்ததும் "என்னுடன் காரில் வா" என்று அழைத்துப் போனார்.

எம்.எஸ்.எக்ஸ். 856 என்ற கறுப்பு அம்பாஸிடர் கார். முன் இருக்கையில் அப்பச்சி... பின்னால் நான்.

ஸ்டுடியோவுக்குப் போனதும் "என் ரூமுக்கு வா" என்றார். போனேன்.

ரங்கசாமி அய்யங்காரை வரச் சொன்னார். எங்கள் அலுவலகத்தில் மிக மூத்த ஊழியர் அவர்.

"வாகமேனன் வேலையை இனிமே சரவணன்தான் பாக்கப் போறான். காலேஜுக்குப் போற வரைக்கும் இங்கே இருப்பான். அவனுக்கு எல்லாரையும் அறிமுகப்படுத்தி வையுங்கள்" என்று ரங்கசாமி அய்யங்காரிடம் சொன்னார் அப்பச்சி.

அய்யங்கார் மிகுந்த சிரத்தையுடன் என்னைத் தம்முடன் அழைத்துக் கொண்டு போய், எல்லோருக்கும் அறிமுகப்படுத்தி வைத்து, இங்கிங்கே இன்னது நடக்கிறது என்று விரிவாகச் சொல்லி எனக்கு விளக்கினார்.

என் சகோதரர் குமரனுக்கும், எனக்கும் தலா மாதம் எழுநூற்று ஐம்பது ரூபாய் சம்பளம் நிர்ணயித்தார் அப்பச்சி. நாங்கள் மாதச் சம்பளத்தை அப்படியே சிந்தாமல் சிதறாமல் கொண்டு போய், அம்மாவிடம் கொடுத்து விடுவோம். அம்மா எங்கள் செலவுக்காக மாதம் தலா ஐம்பது ரூபாய் கொடுப்பார். அதுவே அப்போது எங்களுக்கு அதிகமாக இருந்தது.

'தெய்வப் பிறவி', 'மாமியார் மெச்சிய மருமகள்' ஆகிய இரண்டு படங்கள் ஒரே நேரத்தில் எங்கள் தயாரிப்பில் இருந்தன. இரண்டின் படப்பிடிப்புகளும் நடைபெற்று வந்தன. 'மாமியார் மெச்சிய மருமகள்' படம் வெளிவந்தபோது, எனக்கு தனிப்பட்ட முறையில் வருத்தமும் ஆதங்கமும் ஏற்பட்டது... அது....

(இன்னும் சொல்வேன்)




1 GRAM GOLD
Celebrates
1st Anniversary
Offer upto Pongal
10% DISCOUNT
We thank all our customers for your patronage
★ 1 Gram Gold Jewels
★ American Diamond Sets
★ Precious Beads & Stones
★ Coral Jade Flower Sets
★ Hyderabad Gold Foil Beads
★ Lucky Birth Stones
★ Ruby Emerald Blue Sapphire Necklace Sets
★ Ruthratcham, Spadicum & Navarathina Mala's Etc.
★ Temple Jewellery
★ Imported Beads in all Colours
★ Polki Sets
★ Fancy Jewels
★ Kundan & Korean Jewels
CHOLA FASHION JEWELLERY
15, NORTH MADA STREET, MYLAPORE, CHENNAI-4. PH : 2495 3111
ALL MAJOR CREDIT CARDS ACCEPTED ★ SUNDAYS OPEN

மற்றவர்களின் வீட்டை தமது ஓவியங்களால் அலங்கரிக்கும், பிரபல ஓவியர்கள், தங்கள் வீட்டு வரவேற்பறையில் எந்த ஓவியத்தை மாட்டியிருப்பார்கள்? திடீர் விசிட் அடித்து எட்டிப் பார்த்தபோது...







**மாருதி :**

இந்த இளமங்கையின் ஓவியம் நான் சென்னைக்கு வந்த புதிதில் (1963) குமுதம் ஆசிரியர் கொடுத்த ஒரே ஒரு அங்குலப் புகைப்படத்தை மாதிரியாக வைத்து வரைந்தது. உண்மையில் அந்தப் பெண் மலைவாழ் இனத்தைச் சார்ந்தவர். அவளது அழகிய புன்னகைக்காகவே தமிழ்பெண் போன்று வரையப் பணித்தார். புகைப்படத்துக்கு இணையான தரத்தில் வெகு தத்ரூபமாக வரைய வேண்டும் என்ற வெறியுடன் வரைந்தேன். அதன் காரணமாக இவ்வோவியம் அட்டைப் படமாகவே வந்தது. ஒரு சவாலாகவே எடுத்து வரைந்ததால், இன்றும் இது எனக்கொரு பொக்கிஷம்.

அடுத்து பெரியார் ஓவியம். இன்று இந்த ஓவியத்தின் பிரதிகள் கடல் கடந்து வாழும் தமிழர்களின் இல்லங்களிலெல்லாம் வீற்றிருப்பது, என் திறமைக்குக் கிடைத்த பாக்கியம்.

**ஸ்யாம் :**

'தியாக பூமி' தொடர் 'கல்கி'யில் வெளிவந்தபோது நான் வரைந்த ஓவியமிது. இளமையாகவே வரைந்து கொண்டிருந்ததோர் இளைஞனுக்கு, இப்படியொரு வாய்ப்பை அளித்தது உண்மையிலேயே மிகப் பெரிய விஷயம். காரணம், அப்பொழுது என் வயது பத்தொன்பதுதான். இன்னொரு முக்கியமான விஷயம். இவ்வோவியத்தில் பாபநாசம் சிவனுடன் இருக்கும் பெண் அணிந்திருக்கும் புல்லாக்கில் ஒரு மணிதான் இருக்கும். ஆனால் 'தியாக பூமி' திரைப் படத்திற்கான ஸ்டில்களில் இரு மணிகள் தொங்குமாம். 'இதை ஏன் கவனிக்கத் தவற விட்டீர்கள்?' என்று மூத்த ஆசிரியரொருவர் என்னிடம் நேரில் வந்து உரிமையுடன் கேட்டபோது - எந்த அளவுக்கு நுணுக்கமாக கவனித்து ரசிக்கிறார்கள் என்பதை உணர்ந்தேன்



# வரைஞ்சதுலே

**ஜெயராஜ் :**

இந்த ஓவியம் கலைஞருடைய 'தென்பாண்டி சிங்கம்' நாவலுக்காக, இரண்டு மணி நேரம் எடுத்துக் கொண்டு தீட்டப்பட்டது. இதைத் தீட்டுமுன் கலைஞர் இதற்கான கதைக்களம், கதை நடக்கும் காலம் என பல விவரங்களை, மிகத் தெளிவாகச் சொல்ல, அதன்படியே தீட்டிக் கொடுத்து பாராட்டைப் பெற்றேன்.



இரண்டாவது ஓவியம் 'அப்புசாமியும், சீதாப்பாட்டியும்' கதைக்காக என் கற்பனைக்கு வரைந்து, கதைக்கும் வெகு நேர்த்தியாகப் பொருந்தியது. இதற்கு ஒன்றரை மணி நேரம் எடுத்துக் கொண்டேன். நான் எத்தனையோ ஓவியங்களை வரைந்து இருப்பினும், இவை இன்றும் என்னிடமே இருக்கின்றன - மற்றவை வரையச் சொன்னவர்களிடம் சென்றுவிட்டன.

- இரா. முத்துக்குமார்

படங்கள் : ராஜன்







# பிடிச்சது!

# படம் பாதி; ஜோக் மீதி!




- சி.சிந்துகுமார்






போஸ்ட் கார்ட் கதை!



# பொம்மை

டமால்!

ஆசையாய் வாங்கிவந்த கிருஷ்ணன் பொம்மையை ஷெல்ஃபிலிருந்து கீழே தள்ளிவிட்டு விட்டான் என் மகன் ஆகாஷ்.

பொம்மையின் ஒரு கால் ஒடிந்துவிட்டது!

அவன் முதுகில் 'பளார்' என்று ஒரு அறை வைத்துவிட்டு, பசையைத் தேடி உடைந்த காலைப் பொருத்தி ஒட்டினேன்.

ஆகாஷ் அழுதுகொண்டே தாத்தா ரூமுக்குள் போய்விட்டுத் திரும்பினான். பொம்மையை மறுபடி எடுக்கப் போனான்.

"தொடாதே!" - கத்தினேன்.

"இல்லேப்பா, தாத்தாவுக்கு கால் ஒடிஞ்சப்போ போட்ட மருந்து இருக்கு! இதைப் பூசிவிட்டா கிருஷ்ணனுக்கு கால் நல்லாயிடும்!"

அடடா! கிருஷ்ணா!

உன்னை இத்தனை வருஷம் எவ்வளவோ பூஜை பண்ணி என்ன பிரயோஜனம்?

உன்னை மண்ணாக அல்லவா நினைத்துவிட்டேன்!

என் குழந்தை உன்னை சாட்சாத் கிருஷ்ணனாகவே நினைத்து, உன் உடைந்த காலுக்கு மருந்து கொண்டு வந்திருக்கிறானே!

ஆகாஷை கண்ணீர் மல்க வாரி அணைத்துக் கொண்டேன்!

தஞ்சாவூர் கோபாலி

# காதல் தேறாது!

க.சீ.சிவகுமார்

அவன் அவளை முதன் முறையாகச் சந்தித்தபோது அவனது தங்கையின் திருமணத்துக்கு பன்னிரண்டு மணி நேரம் இருந்தது. அதாவது, தங்கையின் திரு



மணத்தின்போதுதான் அவளைச் சந்தித்தான்.

போன மாதம் கல்லூரி முடித்து இப்போது கல்யாணம் ஆகும் தங்கை அறிமுகப்படுத்தி வைத்தாள்.

"என்னோட கிளாஸ் மேட்."

தங்கையின் கல்லூரித் தோழி. கூடவே நிறைய தோழர்களும், தோழிகளும் வந்திருந்தாலும் கயல்விழி இரவு வானில் நிலவென தனித்துத் தெரிந்தாள். கொதிநிலைக்கு முந்தைய குமிழ்கள் பாத்திரத்தின் ஆழத்திலிருந்து எழும்ப ஆரம்பித்தன. காதலிக்கலாம் எனத் தோன்றியது. தங்கையின் தோழிகளைக் காதலிப்பதில் அணுகுமுறை சார்ந்த சாத்திய கூலபங்கள் உள்ளன. வீட்டுக்கு அழைக்கலாம், போகலாம்.

தொலைபேசி உள்ள வீடெனில், ''கயல் இருக்காங்களா?'' நனைந்த குழந்தையைக் கையில் வைத்துக்கொண்டு. பெண்ணின் அண்ணன் என்றால் சும்மாவா?

''மாப்ளேய்... அதா மூணாவது



வரிசையில அஞ்சாவது இலை பழுப்பா இருக்காம். மாத்தி நல்ல இலையாய்ப் போடு''

பம்பரத்தின் சாட்டை எனக்கேட்டு ''தங்கச்சி நேத்து உங்களை ரொம்ப விசாரிச்சா...'' என ஆரம்பித்து, கள்ளத்துடன் கூடிய காதலை வெல்லத்துடன் கூடிய கடலை போல்...

''அப்பா கூப்பிடறாங்க பாரு'' எனத் தங்கை அவன் கனவைக் கலைத்து அனுப்பினாள். கல்யாண வீட்டில் அவனை ஆளாளுக்கு பம்பரம் விட்டார்கள். போன ஜன்மத்தில்கூட பார்த்திராத பெண் ஒருத்தி,

''மிஸ்டர் தினேஷ். ஒரு டவல் ஏற்பாடு பண்ணுங்களேன்'' என்றாள் தொடை நெக்குவிடுகிற போதெல்லாம் கயல்விழியைத் தேடிப்பிடித்து, ஒரு பார்வை பார்த்து போஷாக்கு ஏற்றி முறுக்கிக் கொள்வான். சும்மாவும் சொல்வதற்கில்லை. கண்களில் குளுக்கோஸ் தொழிற்சாலை வைத்திருந்தான்.

வேலை ஓய்ந்து ராத்திரி பன்னிரண்டு மணிக்கு அவளையும் அவளது நண்பர், நண்பிகளையும் சந்தித்தான். கயல்விழி, ''காலைநேரக் காற்றே வாழ்த்திச் செல்லு'' என்று

பாடிக் கொண்டிருந்தாள்.

"பரவாயில்லை நல்லாப் பாடறீங்களே. ஆனா பன்னிரண்டு மணிக்கு இந்தப் பாட்டா?" என்றவாறு, அவர்கள் ஜமாவில் இணைந்து கொண்டான்.

"மேற்கொண்டு என்ன பண்றதா இருக்கீங்க. எம்.எஸ்.ஸியா?" என்றான்.

"கல்யாணம் தான்" என்றாள் சிரித்துக் கொண்டே.

'என்னோட தானே' என நாக்கு நுனிக்கு வந்தகேள்வி, நல்ல வேளையாய் தொண்டையை அடைத்து நின்று போனது.

தங்கையின் திருமணம் முடிந்து அனைவரும் விடைபெற்றுச் சென்றுவிட்டார்கள். ஓரிரு நாளில் தங்கையும் கணவர் வீடு சென்றுவிட்டாள். அதன் பின் கயல்விழி பற்றிய நினைவுகள் கனவு போல் கசிய ஆரம்பித்தன. தங்கையின் விலாச ஏட்டைத் தேடி எடுத்து, அதில் கயல்விழியின் முகவரியை நெஞ்சிலும், பாக்கெட்டிலும் பதிந்து கொண்டு அலைந்தான். என்ன செய்யலாம்?

கடிதம் என்று ஏதும் எழுதலாமா? நேரில் போகலாமா? பரிசு அனுப்பலாமா? என பல 'லாமா'க்களை யோசிப்பதில் தலைமுடி இழந்து, லாமா போல ஆகி விடுவான் என்பதாய்த் தோன்றியது. 'தங்கையின் திருமணத்திற்கு வந்ததற்கு நன்றி' எனக் கடிதம் எழுதலாம். அப்படி எழுதப் போனால், நியாயப்படி இரண்டாயிரம் கடிதம் எழுதணும். கல்லூரி சகாக்களுக்கு மட்டுமெனினும் இருபதாவது எழுத வேண்டும். அப்படியெனில், கயலுக்கு இதிலென்ன பிரத்யேகமும் சிறப்பும் இருக்கிறது?

மொத்தமே எழுபது வார்த்தைகள் பேசியிருப்பாள். கிளையிலமர்ந்து கீச்சட்டான் போடும் குருவிபோல், மனசு அதையே ஏன் சலசலக்கிறது என நொந்தான். திடீரென ஒரு நாள் அவள் முகம் மறந்து விடுமோ எனப் பயந்தான். ஒருமுறை மட்டும் பார்த்த முகம் மறக்க எத்தனை மாதம் ஆகும்? அறிவியல் கணக்கு ஏதும் உண்டா? எனில் கயல்விழியின் முகம் மறக்க எத்தனை நூற்றாண்டு ஆகும்?

'கடல் காற்று உள்ளவரை கயல்விழி உனை மறவேன்'. இத்தனை தவிப்பு பின்னால் வரும் என்று தெரிந்திருந்தால் அன்றைக்கே காதலைச் சொல்லியிருக்கலாம். ஆனால் காதலைச் சொல்லும் நேரம் தங்கையின் திருமண நேரமல்லவே. அப்படிச் சொல்ல முனைவது அதர்மம், அநீதி, அபத்தம், அநியாயம், அசாத்தியம், அ...

ஏதோ ஒரு நதிமூலம் போல உள்ளுக்குள் முகிழ்த்துவிட்டான். பின் எப்படியோ உபநதிகள் சேருகின்றன. ஓடுகிறது காதல் பேராறு.

இப்படியே தான் ஒருவன் மட்டிலும் பிரிவென்பதோர் நரகத்தில் உழல முடியாது எனத் தீர்மானித்து, முதற்கட்ட நடவடிக்கையாக தங்கையைச் சந்தித்து விஷயத்தைத் தெரிவித்துவிட முடிவெடுத்தான். தங்கையின் ஊருக்கு பஸ் ஏறினான்.

நல்ல சாயங்காலத்தில் வாசல் தெளித்தவாறிருந்த தங்கை "வாண்ணா" என வரவேற்றாள்,

"மச்சான் எங்கேம்மா?"

"அவரு வர ஒன்பதரை மணி ஆகும்..."

கொஞ்ச நேரம் செய்திகள் பல பேசிக் கொண்டிருந்தபோது, தங்கை திடீரென...

"உனக்கு கயல்விழி ஞாபகம் இருக்குதா. எங் கல்யாணத்துக்கு வந்திருந்தா?"

ஞாபகம் இருக்குதாவா? ஞாபகமாகவே இருக்கு.

"ஆமா. உயரமா அழகா..."

"உம். நாளைக்கு அவ வர்றா."

"அப்படியா?" என்றான். குரலில் 105 டிகிரி உற்சாகத்தை மறைத்துக் கொள்ள பெரும் பாடுபட வேண்டியிருந்தது. இருதயம் இறக்கை கட்டிக் கொண்டு காடு,



மலை, சோலை, ஓடை எல்லாவற்றிலும் பறந்து மிதந்தது. இப்போது தங்கை அனுகுண்டு சோதனை நிகழ்த்தினாள்.

"பாவம்ணா அவள்"

"என்ன, என்ன ஆச்சு?"

"வில்லியம்ஸ் தெரியுமா உனக்கு. அவனுங்கூட கல்யாணத்துக்கு வந்திருந்தான்"

"தெரியலயே?" என்றான் பரிதாபமாகி. அவனுக்கு உண்மையில் கயல்விழியைத் தவிர மற்ற யாரையும் அவ்வளவாக, ஞாபகம் இருக்கவில்லை. முக்கியமான சொந்தக்காரர்கள் கல்யாணத்துக்கு வந்ததே 'சில் அவுட்' போலத்தான் ஞாபகம். அத்தனை மயக்கத்திலிருந்தான். ஆகவே, "சரி சொல்லு. வில்லியம்ஸுக்கு என்ன?"

"வில்லியம்ஸும் அவளும் காதலிச்சாங்க"

இருதயப் பறவை இப்போது காலும், இறக்கையும் முறிந்து காடு மலைகளில் நொண்டி அடித்தது. நெஞ்சப் பகுதியில் வெம்மையும், பின் வெறுமையும் தோன்றி உலுக்கின. வியர்வைக் கண்களில் அமுதான்.

"சரி. இப்ப என்ன?"

"இப்ப வில்லி மதம்மாறச் சொல்றான். இவ முடியாதுங்கறா"

"மாறிடலாமே"

"இவளால முடியாது. எனக்குத் தெரியும்"

"சரி. மதம் மாறாட்டித்தான் என்ன?"

"வில்லியம்ஸோட அப்பா ஒப்புக்க மாட்டாரு. துரத்திடுவாரு. அவருக்கு கரூர்ல மட்டும் இரண்டு ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ் இருக்கு. இத்தனை சொத்தை இழந்துட்டு வாழ்றது எப்படின்னு வில்லியம்ஸ் யோசிக்கறான்"

"அப்ப என்னதான் முடிவு?"

"முடிஞ்சு போச்சு. இனி அவங்கவங்க அவங்கவங்க வழில"

"ப்ச். இது கோழைத்தனம்"

"உன்னோட விமரிசனம் இருக்கட்டும். நாளைக்கு அவ வந்தா, புண்படறா மாதிரி ஏதும் பேசிடாதே. அதுதான் இப்பவே சொல்லி வச்சேன்"

"சரி" என்று பதில் தந்தானே தவிர, உள்ளுக்குள் கொதித்துக் கொதித்து வந்தது. என்ன அழகான பெண். ஒரே மதத்தில் நானெல்லாம் இல்லையா? காதலிக்க கூடை நிறையக் காதல் வைத்துக் கொண்டு நிற்கிற பாவிகளை இந்தப் பெண்களுக்கு ஏன் கண் தெரிவதில்லை. தேடித் தேடிப் போய் கல்யாணத்தைப் புறக்கணிக்கிறவனைத்தானே எல்லாப் பெண்களும் காதலிக்கிறார்கள்?

**பி**ன் இரவு வெகு நேரம் வரையிலும் கூடத் தூக்கமே வரவில்லை. மறுமணம் போல, மறு காதல் செய்யலாமா என யோசித்தவன். ஆனால் அது தோதுப் படாது எனவும், அந்த அளவுக்கு இன்னும் தான் இளைத்துப் போய்விடவில்லை எனவும் எண்ணி இறும்பூதெய்தினான். புஸ்ஸும், புஸ்ஸும் என மூச்சு வேறு ஆக்ரோஷமாய் வந்தது. தூக்கத்தின் முதலாம் படிகளில் ஆழ்ந்தபோது அவன், கயல்விழி, முகமூடியணிந்த வில்லியம்ஸ் மூவரும் சவமாய்க் கிடக்க கனாக்கண்டான். கிடத்தப்பட்ட ஆம்புலன்ஸில் காதல் வாகனம் என்று சிவப்பு எழுத்துக்களில் எழுதியிருந்தது. திடுக்கிட்டு வியர்த்து எழுந்து, மணி மூன்று எனக் கண்டான்.

ஒரு வழியாக அயர்ச்சி தாளாமல் தூங்கிப் போய், காலை எட்டரைக்குக் கண் விழித்தான். அவனது காலை உணவுக்குப் பிறகு தங்கை எங்கேயோ வெளியே சென்றிருந்த நேரம், கயல்விழி வந்தாள்.

நிராதரவான குரலில் 'ஹலோ' என மலங்கலாக விளித்தவளை நோக்கி, அவன் திடமான குரலில் வரவேற்றான்.

"வாங்க... ஸ்டெல்லா மேரி!" ●

## ஏறுது, எகிறுது!

**இந்தியன் ஆயில் கார்ப். இலாபம் :**

*2001 - 2002 ரூ.4,599 கோடி*

*2002 - 2003 ரூ.8,414 கோடி*

*2003 - 2004 ரூ.9,9991 கோடி*

*(தகவல் : ஏ.ஜி.எம். இ.ஆ.கா., மும்பை 24.9.2004)*

**எண்ணெய் நிறுவனங்களின் டிவிடண்ட்:**

| | |
|---|---|
| BP | 350% |
| HP | 220% |
| IOC | 210% |
| Cochin Refineries | 100% |

விலை ஏற்றத்தை எதிர்பார்த்து இ.ஆ.கா. பங்கு விலை ஒரே நாளில் ரூ.419ல் இருந்து ரூ.432க்கு ஏறி இருக்கிறது.

**- ஃபிரெடி சந்திரன்**

சர்ச் இன்ஜின்களை எப்போதும் நச்சரித்துக் கொண்டே இருப்பவரா நீங்கள்? Google-தான் உங்கள் குல தெய்வமா? 'அதெல்லாம் மாற்றிக் காட்டு கிறேன் பார்' என புது வடிவத்தில் குதித் துள்ளது beta.search.msn.com நீங்களே 'சர்ச்' பண்ணிப் பார்த்துட்டு, இந்த 'சர்ச்சைக்கு' விடை தெரிஞ்சிக்கோங்க!

"குதிரைகள் வாங்க, விற்க எங்ககிட்ட வாங்க!" என்று கனைக்கிறது world of horses.co.uk என்ற லண்டன் வலைத்தளம். 'பச்சைப்புள்ளையாட்டம் வளர்த்தேன். ஏமாத்திட்டு ஓடிடுச்சே' என்று ஓடிப்போன குதிரை களைத் தேடித்தரச் சொல்லி சிலர் புலம்பு கிறார்கள். 'அதுக்கு ஒண்ணும் தெரியாதுங்க. அறியாப்புள்ள. நல்லாத் தாண்டும். எவனோ படுபாவி லவட்டிக் கிட்டுப் போயிட்டானே" என திருட்டுப் போன குதிரைகளுக்காக சிலரும் புலம்பு கிறார்கள். குதிரை வளர்ப்புமுறை, ஹெல்த் டிப்ஸ் எல்லாம் கிடைக்கின்றன. வாடகைக்கு குதிரைகள் கிடைக்குமிடம், குதிரை பயிற்சிப் பள்ளிகள் என 'லாடம்' கட்டியுள்ளனர் இவ்வலைத்தளத்தில்!

பாகிஸ்தான் பற்றிய மேட்டர்களை சுடச்சுடத் தெரிந்து கொள்ள வேண்டுமா? பாகிஸ்தான் தட்பவெப்ப நிலை, அரசியல், விளையாட்டு, வர்த்தகம், மருத்துவம் என வெரைட்டியாக அறிந்து கொள்ள

# லாலிவுட் லாலிபாப்

வலைபாயுதே



வேண்டுமா? பாகிஸ்தான் திரைப்பட உலகமான 'லாலிவுட்' பற்றிய 'லாலிபாப்' செய்திகள் வேண்டுமா? தயங்காமப் போங்க www.paktribune.com -க்கு. ரொம்ப அருமையாக, அப்டேட்டாக இயங்குகிறது இத்தளம். search -வசதியும் சூப்பர்.

(படத்துல இருக்கிறது - பாக். கோடடாப் நடிகை 'ரீமா'ங்கோ!)



ஐஸ்வர்யா ராயை எப்பவுமே பார்த்துக்கிட்டு இருக்கணும்னு நினைக்கிற விவேக் ஓபராய் ஜாதியா நீங்க? அப்படின்னா coolbuddy.com -க்கு போய், ஐஸ்வர்யா ராய் அழகா கடிகாரமா சுத்தறாங்க, டௌன்லோட் பண்ணிப் பாருங்க... பாருங்க... பார்த்துக்கிட்டே இருங்க!



- ப்ரௌஸர்

# அருள்வாக்கு



**தோ**ஷத்தை எப்படிப் போக்குவது! நமக்கு அழுக்கு என்பது தேகம். இந்தத் தேகம் எதனால் வந்தது? பாபத்தினால் வந்தது. அந்தப் பாவத்தை எதனால் செய் தோம். கரசரணாதி அவயவங்கள், மனம் இவற்றினால் செய்தோம். சுற்றியுள்ள கயிற்றை அவிழ்க்க வேண்டி யிருந்தால், சுற்றின பிரகாரமே மறுபடியும் திருப்பி அவிழ்க்க வேண்டும். அதே மாதிரி அஸத் காரியங்களை ஸத்காரியங்களினாலும், பாவங்களைப் புண்ணியங் களினாலும் தொலைக்க வேண்டும். கரசரணாதி அவயவங்கள், மனம் இவற்றினால் செய்த பாவங்களை, இந்த அவயவங்களினாலேயே தொலைக்க வேண்டும். தானம், தருமம், கர்ம அநுஷ்டானம், ஈசுவரநாமோச் சாரணம், ஆலய தரிசனம் முதலியவையே ஸத்காரியங் கள். பாவத்தைப் போக்குவதற்கு இவையே உபாயம். இவற்றால் பாபத்தைப் போக்கிக் கொண்டு, பிறகு ஞான மார்க்கத்தில் ஈடுபட்டு எல்லையில்லாத ஞானமாக, ஆனந்தமாக ஆக வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# தொடருது சேவை!



திருவெள்ளறை, ஸ்ரீ புண்டரீகாக்ஷப் பெருமாள் கோவில். திருச்சியிலிருந்து இருபது கி.மீ. தொலைவில் உள்ளது. ஆதித் திருவெள்ளறை என்கிற சிறப்புப் பெயரும் அதற்கு உண்டு. நூற்றியெட்டு வைணவத் திருத்தலங்களில் இதுவும் ஒன்று. ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப் பெற்ற திருத்தலம்.

நாள்தோறும் திருவெள்ளறைப் பெருமாளுக்கும், சுவாமி சன்னிதிகளுக்கும் தொடர்ந்து மாலை கட்டிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார் முதியவர் ஒருவர். "உழைத்தது போதும்; ஓய்வெடுங்கள்" என்று உறவினர்களும், தெரிந்தவர்களும் வற்புறுத்திய போதும், அவர் அந்தத் திருப்பணியில் இருந்து தம்மை விடுவித்துக் கொள்ளவில்லை. அய்யாக்கண்ணு பாகவதருக்கு. வயது தொண்ணூற்று நான்கு.



அய்யாக்கண்ணு பாகவதர்

காளவாய்ப்பட்டி என்கிற சிறு கிராமம் திருவெள்ளறைக்கு அருகே உள்ளது. அங்கு 1910ல் பிறந்தவர் அய்யாக்கண்ணு. பிறந்த ஏழு மாதத்தில், பிழைப்புக்காக மலேஷியாவுக்குத் தூக்கிச் சென்று விட்டனர் அவர்களது பெற்றோர். அங்கு கூலி வேலை பார்த்து வந்துள்ளனர். பின்னர் மலேஷியாவில் நிலைமை சரியில்லாமல் போகவே, அய்யாக்கண்ணுவின் பத்தாவது வயதில், காளவாய்ப்பட்டிக்கே திரும்பி விட்டனர். மிகவும் வறுமையில் சிக்கிக் கிடந்த அய்யாக் கண்ணு, அந்த இளம் வயதிலேயே எந்த வேலைக்குச் செல்வதென்று புரியாமல் திகைத்து நின்றார். அப்போது திருவெள்ளறைக் கோயில் நிர்வாகத்தைக் கவனித்து வந்த ரங்கநாத ராமானுஜன் என்பவர், கோயிலுக்குச் சொந்தமான நந்தவனப் பூந்தோட்டத்தில் பூக்களைப் பறித்து, பெருமாளுக்காக மாலைகள் கட்டித் தருகின்ற பணியை ஒப்படைத்தார். பத்து வயதில் தொடங்கியதுதான் இது.

அப்பொழுது 1924. காவிரியில் பெருவெள்ளம். காவிரிக் கரையில் அமைந்துள்ளது



ஸ்ரீ புண்டரீகாக்ஷப் பெருமாள்- ஸ்ரீ பங்கஜவல்லி தாயார்

நடந்து சென்று, பின்னர் கொள்ளிடத்தைப் படகில் கடந்து ஸ்ரீரங்கம் கோயிலுக்கு பூமாலைகள் தந்து வரலானார். மதுரகவி ஆழ்வார் நந்தவனம் சிரடைகின்ற ஒரு மாதம் வரைக்கும், ஸ்ரீரங்கம் பெருமாள் கோயிலுக்கு மாலைகள் கட்டிக் கொண்டு போய் தந்திருக்கிறார் அய்யாக்கண்ணு பாகவதர்.

இருபத்தைந்தாவது வயதில் திருவெள்ளறைக் கோயில் நிர்வாகத்தினரே இவருக்குத் திருமணமும் செய்து வைத்துள்ளனர். அப்போது மாத ஊதியம் முப்பது ரூபாய். இவருக்கு மூன்று மகன்கள், மூன்று மகள்கள். அனைவரும் திருமணமாகிச் சென்று விட்டனர். இரண்டாவது மகன் அருணாசலத்தின் குடும்பத்துடன் வசித்து வருகிறார் அய்யாக்கண்ணு பாகவதர்.

இன்றும் அதிகாலையில் எழுந்து நீராடி, நந்தவனத்துக்குச் சென்று பூப்பறித்துப் பெருமாளுக்கு மாலை கட்டி வரும் அய்யாக்கண்ணு பாகவதருக்கு, தற்போது மாத ஊதியம் முந்நூறு ரூபாய். இந்தப் பணத்தில்தான் மாலை தொடுக்கும் நாரும் வாங்கிக் கொள்ள வேண்டும். பெருமாளுக்கு மதிய வேளைகளில் நிவேதனம் செய்யப்படும் பிரசாதம்தான், இவர்கள் குடும்பத்தாரின் பசியாற்றி வருகிறது. இந்த வயதிலும் மிகவும் சுறுசுறுப்புடன் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார் அவர். "பெருமாள் எனக்கு இட்ட கட்டளை இந்தப் பணி. என் இறுதி நாள் வரைக்கும் இதனைச் செய்து கொண்டிருந்தால், அதுவே எனக்குப் போதும்!'' என்கிறார் அய்யாக்கண்ணு பாகவதர்.

மதுரகவி ஆழ்வார் நந்தவனம். பெரு வெள்ளத்தினால் நந்தவனம் தோட்டம் முழுவதும் நீரில் மூழ்கி, பூச்செடிகள் அனைத்தும் அழிந்து போயின. நித்யப்படி சேவைகளுக்கு, ஸ்ரீரங்கம் பெருமாளுக்கு அந்த நந்தவனத்திலிருந்துதான் பூக்கள் கொய்து மாலைகள் கட்டி வந்து சேர வேண்டும். (இப்பொழுதும் இதுவே நடைமுறை). பெரு வெள்ளத்தினால், காவிரி மற்றும் கொள்ளிடம் ஆற்றுப் பாலங்களும் சிதைந்து உடைந்து போய் விட்டன. பூமாலைகளுக்கு என்ன செய்வது?

திருவெள்ளறைக் கோயிலிலிருந்து அய்யாக்கண்ணு பாகவதர் (அப்போது அவருக்கு வயது 14) மாலைகள் கட்டி எடுத்துக் கொண்டு, நொச்சியம் வரை

கட்டுரை, படங்கள்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# சிவசங்கரி

**நை**ல் நதியின் மேற்குக் கரையில் லுக்சர் என்ற நகரத்துக்கு எதிர்ப்பக்கமாய் அமைந்திருக்கும் தேபன் இடுகாடு (Thepan Necropolis), டூரிஸ்டுகள் கண்டிப்பாய்ப் பார்க்க வேண்டிய இடம். பழைய அரச பரம்பரையினரின் சமாதிகள், அவற்றிலுள்ள பொக்கிஷங்களுக்காகத் தொடர்ந்து கொள்ளையர்களால் சூறை யாடப்படுவதைப் புரிந்து கொண்ட புதிய அரசபரம்பரை மன்னர்கள், திருடர்களிட மிருந்து தங்களின் பதப்படுத்தப்பட்ட உடலைக் காக்க வேண்டிய தீர்மானத் தோடு எகிப்தின் மத்தியப் பகுதியில், நைல் நதியை ஒட்டியுள்ள தேபன் பாலைவனத்தையும், வறண்ட தேபன் மலைகளையும் தங்களது சமாதிகளை நிர்மாணிக்கும் இடங்களாகத் தேர்வு செய்தனர். (இத்தனை முஸ்தீபுகளையும் மீறிக் கொண்டு கொள்ளையர்கள் செல்வத்தைத் திருடினார்கள் என்பது வேறு விஷயம்!). இறுதிச் சடங்குகளை நடத்தும் கோவில்களை (mortuary temple) நைல் பள்ளத்தாக்கிலும் சமாதிகளைப் பாலைவனத்திலும் கட்ட அவர்கள் முடிவெடுத்துச் செயலாக்கியது இந்த அடிப்படையில்தான்.

'தேபன் இடுகாடு' என்றழைக்கப்படும் பிரதேசத்தில் ஆய்வாளர்கள் ஆராய்ச்சி செய்ததன் விளைவாக, அரசர்களின் சமாதிகளைக் கொண்ட 'அரசர்களின் பள்ளத்தாக்கு', ராணிகள் சமாதிகளை உள் ளடக்கிய 'அரசிகள் பள்ளத்தாக்கு', 'உயர் குடி மக்களின் சமாதிகள்' (Temple of nobles), ராமேஸியம் (Ramesseum), ராணி ஹட்சிப்சுட்டின் இறுதிச்சடங்கிற்காகக் கட்டப்பட்ட தெர்-எல்-பஹ்ரி (Deir-el-Bahri) போன்று பல புராதன இடங்கள் கண்டுபிடிக்கப்பட்டுப் பொது மக்களின் பார்வைக்காகத் திறந்துவிடப்பட்டுள்ளன.

ஈ, காக்கையைக் கூடக் காண முடியாத தேபன் பாலைவனத்தில், 'அரசர்களின் பள்ளத்தாக்கு' மட்டும் சுமார் மூன்று கி.மீ. தொலைவுக்கு நீண்டிருக்கிறது. நம்முடைய வண்டியைக் குறிப்பிட்ட இடத்தில் நிறுத்திவிட்டு, கொஞ்சம் நடந்து, எக்ஸி பிஷனில் காணப்படுவது போன்ற குட்டி வண்டிகளைக் கொண்ட தொடரில் பயணித்து, பள்ளத்தாக்கின் துவக்கத்தை அடைந்துவிட்டால், அப்புறம் நடராஜா சர்வீஸ் மூலம் கொளுத்தும் வெயிலில் ஆங்காங்கே சிதறியிருக்கும் சமாதிகளைச் சென்று பார்க்க முடிகிறது.

அரசர்கள் புதைக்கப்பட்ட இடத்தைப் பொதுவாக 'உண்மையின் இருப்பிடம்' (Place of Truth) என்றும் அந்தக் கல்லறை களைக் கட்டிய தொழிலாளிகளை 'உண்மை இருப்பிடத்தின் சேவகர்கள்' (Servants of the Place of Truth) என்றும் அக்காலத்தில் அழைத்திருக்கிறார்கள். கொள்ளையர்களின் தாக்குதலிலிருந்து தப்பிக்கவும் அவர்களை ஏமாற்றுவதிலும் இத்தொழிலாளிகள் நிபுணர்களாக இருந்த தில், ஒவ்வொரு சமாதியும் 'போலி சமாதி அறை', வெற்று சவப் பெட்டிகள், உண்மை சமாதிக்குச் செல்ல ரகசியக் கதவுகள் - என்று பல உத்திகளுடன் கட் டப்பட்டிருந்ததை இன்றைக்கும் காண முடிகிறது.

இதுவரை அறுபத்தி நான்கு சமாதிகள் தோண்டியெடுக்கப்பட்டு, சுண்ணாம்பு



• ஹட்சிப்சுட் கோவில்

# சாபம் தரும் சமாதி?

மலைகள் சூழ இருக்கும் இப்பிரதேசத்தை மிரட்ஸிகர் (Meretseger) என்ற பெண் பாம்பு தெய்வம்தான் காத்துவந்ததாக ஒரு நம்பிக்கை உள்ளது. அரசர் பள்ளத்தாக்கில் நாம் வாங்கும் நுழைவுச்சீட்டு, நம் விருப்பத்திற்கேற்ப மூன்று சமாதிகளுள் சென்று பார்க்க அனுமதி தருகிறது. இதற்கு மேலும் சமாதிகளைக் காண விரும்புகிறவர்கள், தனித்தனியே பணம் கொடுத்து அந்தந்தச் சமாதியின் நுழைவுச்சீட்டைப் பெற்றுக் கொள்ளலாம்.

கெய்ரோ மியூஸியத்தின் முதல் மாடியில் பரத்தி வைக்கப்பட்டிருக்கும் டுடங்அமுனின் சமாதியைக் காண விரும்புகிறவர்கள், நாற்பது பவுண்டு கொடுத்துத் தனியாய் டிக்கெட் வாங்கினால்தான் அனுமதிக்கப்படுகின்றனர். 1902லிருந்து 1914ம் ஆண்டு வரை முப்பதுக்கும் மேற்பட்ட அரச சமாதிகளைத் தோண்டிவிட்டபோதும், 1922ல் டுடங்அமுனின் சமாதி முழுசாய், அத்தனை பொக்கிஷங்களுடன் கண்டுபிடிக்கப்பட்டதுதான், உலக அளவில் பரபரப்பான செய்தியாகப் பேசப்பட்டது.

"வெப்பம் கடுமையாக இருப்பதால் மூன்று சமாதிகளைப் பார்த்துவிட்டு, முடிந்தால் டுடங்அமுனின் சமாதியையும் காண்பதற்குள்ளாகவே, நீங்கள் சமாதியாகும் அளவுக்குச் சோர்ந்துவிடுவீர்கள். அதனால், ரொம்ப அலையாமல் கிட்டத்தில் இருப்பவற்றை மட்டும் பார்த்துவிட்டுத் திரும்பிவிடுங்கள். நான் இங்கு உங்களுக்காகக் காத்திருப்பேன்" என்று கூறிய பாப், அங்கு

• ராம்ஸெஸின் சவப்பெட்டி இருந்த அறை





• சவப்பெட்டி இருந்த அறைக்குச் செல்லும் பாதை





போடப்பட்டிருந்த தகரக் கொட்டகையின் நிழலில் இதர கைடுகளுடன் அமர்ந்துவிட, நாங்கள் அவரவர் விருப்பப்படி சமாதிகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு பார்க்க முற்பட்டோம்.

புதிய அரசபரம்பரையைச் சார்ந்த முதலாவது, இரண்டாவது, நான்காவது (மூன்றாவது, ஐந்தாவது எல்லாம் காக்கா ஓஷ்-ஆ?!), ஆறாவது என்று விட்டுவிட்டு ராம்ஸெஸ்களின் சமாதிகளும், துட்மோஸிஸ், ஸெட் - இன்னும் பல அரசர்களின் சமாதிகளும், வெவ்வேறு பாலைவன மணல் குன்றுகளின் இடையில் இருக்கின்றன. பிரமிட் போன்று கண்ணுக்குத் தெரியும் விதமாய் அன்றி, பூமியில் பத்து முதல் முப்பது அடி வரை பெரிய பள்ளங்களைத் தோண்டி நடைபாதைகளையும் கட்டியிருப்பதில், கிட்டத்தட்ட எல்லா சமாதிகளின் அமைப்பும் ஒருசில விஷயங்களில் ஒரே மாதிரியாக இருந்த போதும், அளவில் மாறுபடுகின்றன.

பிரியாவும் நானும் பார்த்தவற்றில் மிக முக்கியமானதாய்க் கருதப்படும் டுடங்அமுனின் சமாதியை மட்டும் உங்களுக்கு வர்ணிக்கிறேன். அளவு என்று பார்த்தால், மூன்றாவது ராம்ஸெஸின் சமாதியைவிட 'டுட்'-ன் (இவரை இப்படித்தான் செல்லமாகக் கூப்பிடுகிறார்கள்) சமாதி ரொம்பச் சின்னது. ஆனால் இதற்குள்ளிருந்தே அத்தனை பொக்கிஷங்களை எடுக்க முடிந்ததென்றால், மற்ற சமாதிகளிலிருந்து கொள்ளையர், (ஆய்வாளர்களால் திருட்டுத்தனமாய்) எடுத்துச் செல்லப்பட்ட புதையல்களின் மதிப்பு எவ்வளவு இருந்திருக்கும் என்ற எண்ணம் மலைப்பைத் தருவதாகவே இருக்கிறது.

படிக்கட்டுகளில் பதினைந்து அடி போல இறங்கினதும் நீண்ட நடைபாதை, விட்டத்தில், இருபக்கச் சுவர்களில் தென்படும் பலவகைக் கறுப்பு, மஞ்சள் வர்ண ஓவியங்கள், அவை கூறும் கதைகள் - ஆகியவற்றைப் பார்த்தபடி நீளமாய் நடந்தால், ஒரு பெரிய கூடம் வருகிறது. இது கொள்ளையர்களை ஏமாற்றவெனக் கட்டப்பட்ட காலி அறையாம். இதன் வலது பக்கம் இன்னொரு அறை. இதில் தான் 'டுட்'-ன் - காரைக்குடி டப்பா மாதிரி ஒன்றுக்குள் ஒன்றாக அடங்கிய - மூன்று தங்க சவப் பெட்டிகளும், அதனுள் அவரது சடலமும் இருந்தனவாம். அங்கும், முதல் அறையிலும் அமைக்கப்பட்ட ரகசியக் கதவுகள் வழியே சென்றால் மேலும் இரண்டு அறைகள் இருக்கின்றன. இவற்றிலிருந்துதான் 'டுட்'-ன் 'இறந்த வாழ்க்கை' பயணத்திற்காக வைக்கப்பட்ட அனைத்துப் பொக்கிஷங்களும் கண்டெடுக்கப்பட்டன! பார்த்த வரையில் எல்லா சமாதிச் சுவர்களிலும் அரசர் வாழ்ந்தபோது நடந்த நடப்புகளையும், ஆவியுலகில் அவர் வாழப் போகும் வாழ்க்கையையும் வர்ண, கல் ஓவியங்களாகக் காணமுடிகின்றன. டூரிஸ்டுகளின் தொடுதல், வியர்வை, மூச்சுக்காற்றால் இச்சித்திரங்கள் சிதைந்துவிடக் கூடும் என்ற கவலையில் கண்ணாடித் தடுப்புகளால் சுவர்களை மூடியிருக்கிறார்கள்.

சமாதிகளை பாம்பு, ராஜாளி, இதர தெய்வங்கள் காப்பதால், உள்ளே அத்துமீறி நுழையும் நபர்கள் தண்டிக்கப்படுவர் - என்ற நம்பிக்கை காரணமாய் 'டுட்'-இன்

## எல்லைகள் கடந்த அற்புத மனிதர்!

நான் 'ஓட்டிஸ் எலிவேட்டர்ஸ்' நிறுவனத்தில் பணி புரிகிறேன். ஜாதி, மொழி, மதம், இனம், தேசம் கடந்தவர் ஸ்ரீ சாயி பாபா. அதை புட்டபர்த்தியில் நேரிடையாகக் காணும் பாக்கியம் கிடைத்தது. 'பிரசாந்தி'யில் லிஃப்ட் ஒன்றை பொருத்தப் போயிருந்தோம். எங்களில் ஒருவர் கிறிஸ்தவர். அவருக்கு பாபா வரவழைத்துத் தந்த மோதிரத்தில் சிலுவைக் குறி இருந்தது கண்டு, அந்த கிறிஸ்தவ நண்பரே ஆச்சரியப்பட்டுப் போனார். சந்தனமரத்தில் செய்த சிமிழ் மணப்பது இயற்கை. சந்தனத்தூள் போட்டு வைத்த அலுமினிய டப்பாவும் மணக்கும். சான்றோர் சேர்க்கையால் எளியோரும் பயனடைவார்கள். பாபா பாத கமலங்களில் பணிந்த என்னைப் போல.



* டி.ஆர். ஏழுமலை

'சாபம்' என்ற சேதி பல வருஷங்களுக்கு முன் செய்தித்தாள்களில் வெளியானது உங்களில் சிலருக்காவது நினைவிருக்கலாம். டுடங்அமுன் சமாதியை 1922ல் கண்டுபிடிக்க, ஆய்வாளர் கார்டருக்குப் பணம் கொடுத்ததோடு, சமாதிக்குள்ளும் அவருடன் சென்ற லார்ட் கார்னர்வான் (Lord Carnarvan) விஷப் பூச்சி கடித்து 1923-ல் இறந்ததும், கார்டரின் உதவியாளர் மர்மமான முறையில் லண்டனில் மரித்ததும், மற்றொரு உதவியாளரான ஆர்தர் மேஸ், சமாதியிலிருந்த புதையலை அப்புறப்படுத்தும் முன்னரே திடுமெனக் காலமானதும், மாஜிஸ்ட்ரேட் கௌல்ட் (Gould) நிமோனியா வந்து மடிந்ததும், இன்னொருவர் மனைவியாலேயே கொல்லப்பட்டதும், ஃபிரெஞ்சு ஆய்வாளர் உயரத்திலிருந்து தவறி விழுந்து செத்ததும்-டுடங் அமுனின் சாபத்தால்தான் என்ற பேச்சு, ரொம்ப வருஷங்களுக்கு உலக மக்களிடையே பேசப்பட்ட ஒரு வதந்தி!

அரசர்களின் பள்ளத் தாக்கை உன்பாடு என்பாடு என்று பார்த்து முடித்துவிட்டு வண்டியில் ஏறிக் கொண்டு, ராணி ஹட்சிப்சுட்டின் இறுதிச் சடங்குகள் நடந்த கோவிலுக்கு அடுத்ததாக வந்தோம். பாப் கணித்த வகையில் நாங்கள் அனைவருமே பாதி சமாதியான நிலையில் இருந்ததில், "ஹட்சிப்சுட் என்ற பெயரை 'ஹாட் சிக்கன் சூப்' என்று நினைவில் நிறுத்திக் கொண்டால், மறக்காமல் இருக்கலாம்" என்று பாப் ஜோக் அடித்தபோது, எங்களுக்கு சிரிக்கக் கூடத் தோன்றவில்லை.

ராணி ஹட்சிப்சுட் எகிப்தை ஆண்ட ஒரே ராணி; ஆண்களுக்குச் சமமாக நாட்டைத் திறமையாக ஆண்டவர்; எல்லோரும் மதிக்க வேண்டும் என்பதற்காக ஆண் உடை தரித்து, செயற்கை தாடியை ஒட்டவைத்துக் கொண்டவர் - என்று விவரித்த பாப், "ஒரு புதிர் சொல்கிறேன்... விடை தேட முயற்சியுங்கள்" என்றும் சொல்லி, "ஹட்சிப்சுட் ஒரே ஆளுக்கு அத்தை, சிற்றன்னை, மாமியாராகத் திகழ்ந்தார் என்றால், அவர்களின் உறவுமுறை என்ன?" என்றதும், நாங்கள் திடுக்கிட்டோம். ஒருவரே அத்தை, சிற்றன்னை, மாமியாராயுமா? பண்டைய எகிப்தில் முறையற்ற உறவுமுறை அங்கீகரிக்கப்பட்டது தெரிந்த விஷயம்தான் என்றாலும், இப்படியா?

அங்கிருந்து அலபாஸ்டர் கற்களினால் பாத்திரங்கள் செய்யப்படும் தொழிற்சாலைக்குப் போனோம். கையால் கற்களை உடைத்துத் தட்டித்தட்டி, ஒரு ஜாடியைச் செய்ய ஆறு நாட்கள் ஆகும்போது, அதே ஜாடியை மெஷினில் செய்ய மூன்று மணி நேரம்தான் ஆகிறது. பின்னது கனமாய், பளபளப்பாய் விலை குறைவாகவும், முன்னது தக்கையாய், விலை அதிகமாகவும் உள்ளது.

அடுத்து, அரசிகளின் பள்ளத்தாக்கு... இங்கு ராணிகள் மட்டுமல்லாது, உயர்குடிகளைச் சார்ந்தவர், அரச குடும்பத்துக் குழந்தைகள் என பலரின் சமாதிகளைக் காண முடிகிறது. ஆறு மாதக் குழந்தையின் பதப்படுத்தப்பட்ட உடலைக்கொண்ட கண்ணாடிப் பெட்டியும், இரண்டாம் ராம்ஸெஸின் மனைவியான நெஃப்ரடாரின் (அபு ஸிம்பல் - நினைவிருக்கிறதா?) சமாதியும் இங்கு விசேஷமாய் கவனிக்கத் தக்கவை. பெரிய, கலையுணர்வோடு கூடிய அரசர்களின் சமாதிகளைப் பார்த்த கண்களுக்கு இவை ஜுஜுபி!

கப்பலில் கடைசியாய் உணவு உட்கொண்டபின், பெட்டிகளை எடுத்துக்கொண்டு, லுக்சர் கோவிலைப் பார்த்த கையோடு, இரவு பதினொரு மணிக்கு விமானம் பிடித்து, கெய்ரோ சென்று, தங்கி, மறுநாள் காலை, எட்டு நாட்களாக எங்களை அன்புடன் கவனித்துக் கொண்ட கைட் பாப்-இடமிருந்தும், ஐயாயிரம் வருஷப் பின்னோக்கிய பயணத்தை சாத்தியமாக்கிய எகிப்திடமிருந்தும் பிரியாவிடை பெற்று, துருக்கி நாட்டிலுள்ள இஸ்தான்புல்லுக்குச் செல்ல விமானக் கூடத்துக்கு வந்தோம்.

(தொடரும்)



கபிலன்

# அதி

**கை**யும் பையுமாய்
விபூதிமணக்க
முதல் பேருந்துக்கு
காத்துக் கிடந்தனர்

மரவட்டையாய்
சுருண்டுகிடந்தது
நாய்.

மப்ளர் முண்டாசுகளுடன்
பழுத்த மனிதர்கள்
உட்கார்ந்திருந்தனர்
டீக்கடை பெஞ்சில்.

ஏதோ ஒரு மூலையில்
தினசரிகளைப் படித்துக்
கொண்டிருந்தனர்

கடைசித் தூக்கத்தில் இருந்தான்
கூர்க்கா.

பால் பாக்கெட் சுமந்த
சைக்கிள் மணி ஓசைகள்
கதவு தட்டின.

சாராய நெடியோடு கிடந்தான்
ஒருவன்.

பால் கொடுத்த மார்பை
மூட மறந்து
நடைபாதையில்
கூட்டத்தோடு படுத்துக்கிடந்தாள்
ஒரு தாய்.

சர்க்கரை மனிதர்களின்
கால் நடைகள்

முக்காடு அணிந்த பெண்ணின்
விரல்வழியே ஒழுகியது
கோலம்.

மூடிய இதழோடு புன்னகைக்கும்
தொட்டிச் செடியின் மொட்டுமீது
பனித்துளிகள்.

இவ்வாறாக விடிந்தது
எனக்கான அதிகாலை.

# அகம்

**வ**ரவேற்பறை
மட்டுமேயல்ல வீடு

ஆடை விலகத் தூங்குமறை
சமையலறை, கழிவறை
பண்டக சாலை, கூர் தீட்டப்பட்ட
ஆயுதங்கள் காத்திருக்கும் உக்கிராண
அறை
குப்பைகளும் ரகசியங்களும்
புதைக்கப்பட்டிருக்கும்
தோட்டம்
எல்லாமும் வீடுதான்

அவரவர் பெருமைகளாலும்
புகைப்படங்களாலும்



இரா. பவானந்தம்

முழுக்க முழுக்க
நீ
எனக்கு வேண்டாம்.
உன்
புழக்கம் இருக்கிறது
போதும்!

என் முன் வந்து
எதிர்ப்படவும் வேண்டாம்.
நீ
இருக்கையில்
இருக்கிற அரவம்
போதும்!

சூடும் பூ
வாசனை
சூட்சமம் வேண்டாம்.
நீ
சுடும்
அடுக்களை வாசனை
போதும்!

கனவிலும்
நீ
கைப்பட வேண்டாம்.
மனதில் மெய்ப்படும்
அன்புரு ஒன்றே
போதும்!

நீயே
நீயாய்
என்றும் வேண்டாம்.
உன்னால்
உயிர்க்கும் உயிர்மை
போதும்!



அங்கு சுவர்கள்
போர்த்தப்பட்டுள்ளன.
ஓவியங்கள், பூங்கொத்துகள்
எதுவுமில்லையென்றால்
பாடம் செய்து வைத்த மானின்
தலைகளென
நம் முகங்களைக் கழற்றி அவர்முன்
வைக்கிறோம்

அறைகளிலிருந்து பெருகி வரும்
மகிழ்ச்சி, துக்கம், துன்புறுத்தல்,
ஆட்படுதல் இத்தனையையும்
கனத்தத்திரைகளும் கதவுகளும்
கசிய விடுவதில்லை.

பலநேரங்களில்
வரவேற்பறைகளிலிருந்தே
நாம் திரும்ப நேரிடுகிறது.

அழகிய பெரியவன்

# பேச்சு பலவிதம்!

சிலருக்கு அவர்கள் பேசுவதை நாம் புரிந்து கொள்ள வேண்டுமென்பதில் அவ்வளவு சிரத்தையில்லை. அவர்கள் இடைவிடாமல் பேசுவதற்கு மட்டும் நாம் இடங் கொடுத்துவிட்டு, மௌனமாய்க் கேட்டுக் கொண்டிருந்தால் போதும். மூச்சுக்கூட விடாமல் பேசிக் கொண்டே யிருப்பார்கள். மூச்சு விடுகிற நேரத்தில், இன்னும் இரண்டு வார்த்தை பேசலாமே என்று இவர்களுக்கு ஆசை.

இப்படிப்பட்டவர்கள் இதிகாச புருஷர்களாயிருக்கத் தகுந்தவர்கள் என்று நான் சொல்வேன். இதிகாச புருஷர்கள் எல்லாரும் ஏறக்குறைய அப்படித்தான் பேசுவார்கள். சாதாரண ஜனங்கள் வாக்கியம் வாக்கியமாகப் பேசினால், அவர்கள் அத்தியாயம் அத்தியாயமாய்ப் பேசுவார்கள்!

ஓர் உதாரணம் கவனிக்கலாம். நீர் உமது தர்ம பத்தினியுடனும், சகோதரனுடனும் தூரதேசம் போவதாக வைத்துக் கொள்வோம். அங்கே ஓர் ஊரில் தங்கியிருக்கும்போது, உமக்கு வெளியே ஏதோ காரியமாகப் போகவேண்டியிருக்கிறது. சகோதரனிடம் "அப்பா! பத்திரமாய் இங்கேயே மன்னியின் கால்விரல்களைக் கவனமாய்ப் பார்த்துக் கொண்டிரு; இந்த ஊர் பொல்லாத ஊர்" என்று சொல்லிவிட்டுப் போகிறீர். உமது காரியம் முடிந்து திரும்பி வருகையில் எதிரில் உமது சகோதரன் தனியே வருவதைக் காண்கிறீர். உடனே என்ன சொல்வீர்? "அடபாவி! ஏனடா மன்னியின் கால்விரல்களிலிருந்து கண்ணை எடுத்து விட்டு இங்கு வந்தாய்? என்னடா சமாசாரம்?" என்று கேட்பீரல்லவா? அவன் சொல்லும் சமாசாரத்தைக் கேட்டுக் கொண்டு, பிறகுதான் அவனைத் திட்டவோ, அல்லது உமது மனைவியை நினைத்துப் புலம்பவோ தொடங்குவீர்.

ஆனால், இதிகாச நாயகனாகிய ஸ்ரீ ராமபிரான் உம்மைப் போல் நடந்து கொள்ளவில்லை. வால்மீகி முனிவர் நடந்தது நடந்தபடியே கண்ணால் பார்த்து, ஆரண்ய காண்டத்தில் எழுதியிருப்பதைக் கேளுங்கள்:-

லக்ஷ்மணர் முகம்வாடிச் சந்தோஷமின்றிச் சீதை இல்லாமல் வந்ததைப் பார்த்துத் தருமாத்மாவான இராமர் "ஓ லக்ஷ்மணா, தண்டகாரண்யத்துக்கு என்னைத் தொடர்ந்து வந்த அந்தச் சீதை எங்கே? அவளை விட்டுவிட்டு நீ எங்கு வந்தாய்? இராச்சியத்தை இழந்து துன்பமடைந்து தண்டகாரணியத்தில் அலைந்து திரியும் எனக்கு, என் துக்கத்தின் கட்டுணையாயினாள் எங்கே? வீரா, அவள் இல்லாமல் நான் ஒரு நொடிப் பொழுதும் உயிர்வாழேன். என் உயிர்த் துணையாகிய அமர மாதருக் கொப்பான அந்தச் சீதை எங்கே? உருக்கிய தங்கத்துக்கொப்பான நிறமுடைய சீதையின்றி, நான் இவ்வுலகத்தின் அரசல்ல, தேவலோகத்தின் அரசும் வேண்டேன்...

ஓ லக்ஷ்மணா, சீதை பிழைத்திருக்கிறாளா? இல்லையா? நீ சொல். உன்னுடைய அஜாக்கிரதையினால் அவளை யாராவது அரக்கர்கள் புசித்து விட்டார்களா? மிகச் சிறியவளும் மெல்லியவளும் ஒரு நாளும் துன்பமென்பதை அறியாதவளுமாகிய சீதை, யான் பிரிந்த காரணத்தால் அழுகின்றாள் என்பது நிச்சயம். அந்தத் துஷ்டனான அரக்கன் பெருங் குரலால் 'லக்ஷ்மணா!' என்று கூப்பிட்ட பொழுது நீயும் பயந்தனையோ?...

ஆ! தெவ்வரை அடக்குந் திறனுடையானே, நான் விசனத்தில் மூழ்கிவிட்டேன். இப்பொழுது என்ன பண்ணப் போகிறேன். ஐயோ! இவ்வித அவஸ்தைகள் நான் படவேண்டுமென்பது என் விதிபோலும்!" என்று இவ்வண்ணம் உத்தமியான சீதையைப் பற்றிப் புலம்பிக்

# அமரர்  கல்கி

கொண்டே அதிவேகமாக லக்ஷ்மணருடன் ஜனஸ்தானத்திற்கு வந்து சேர்ந்தார்...

இவ்வாறு நடுவிலே ஒரு வார்த்தை சொல்லக் கூட லக்ஷ்மணனுக்கு இடங் கொடாமல், ஒரே மூச்சாய் ஓர் அத்தியாயம் முடியும் வரை ராமர் பேசிக் கொண்டு வந்து ஜனஸ்தானத்தை அடைந்து ஆசிரமத்துக்குள்ளும் புகுந்து விடுகிறார். அதற்குப் பிறகுதான் லக்ஷ்மணனுக்குத் தான் சீதையை விட்டு வந்த காரணத்தைச் சொல்ல இடங்கிடைக்கிறது.

ஸ்ரீராமபிரானை இவ்விஷயத்தில் பின்பற்றி அத்தியாயக் கணக்கில் பேசுவோர் சிலர் இந்தக் காலத்திலும் இருக்கிறார்கள். சேலத்தில் ஒரு வக்கீல் இருந்தாராம். அவர் பேசும்போதெல்லாம் எதிராளியின் இரண்டு கைகளையும் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு விடுவாராம்! இப்படி அவர் செய்வதில் இரண்டு நோக்கங்கள் உண்டு என்று எனக்கு அவரைப் பற்றித் தெரிவித்தவர் கூறினார். முதலாவது, தான் சொல்வதைச் சொல்லி முடிக்கும்வரையில், எதிராளி தப்பித்துக் கொண்டு போக முடியாமல் செய்வது; இரண்டாவது, நடுவிலே அவர் குறுக்கிடாமல் தடுப்பதற்கு, வாயைப் பொத்துவதற்குப் பதிலாகக் கைகளை அமுக்கிக் கொள்வது!

இத்தகைய நீள வாக்கியக்காரர்களுடன் பேசுவதில் சிரமம் எதுவும் கிடையாது. அவர்கள் பேசத் தொடங்கி விட்டால், நாம் பாட்டுக்கு நம்முடைய காரியங்களைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கலாம்.

- 'கல்கி களஞ்சியம்'
தொகுப்பிலிருந்து,
வானதி பதிப்பகம்

# வெற்றி?

ச.ரெங்கநாதன்



திருநெல்வேலி மாறியிருப்பது போலவும் தோன்றியது. அப்படியே இருப்பது போலவும் தோன்றியது. அண்ணி வைக்கும் சொதி குழம்பின் ருசி மாறவேயில்லை. அப்படி ஒரு ருசி. கனடாவில் இந்த ருசி வருவதில்லை. சொதி குழம்பு, அல்வா எல்லாம் திருநெல்வேலிக்கே உரியது போலும். சாப்பிட்டுவிட்டு நல்ல தூக்கம் போட்டேன். மாலையில் நெல்லையப்பர் கோயில் போகலாம் என்று காரில் கிளம்பினோம்.

"ஏடி! 'வாழ்க்கையில் வெற்றி பெற' புத்தகம் பிடிச்சுருக்கா?" என்று அண்ணன் மகள், பானுவிடம் கேட்டேன்.

"புத்தகம் அட்டையத்தான் பார்த்தேன். இன்னும் படிக்கவே ஆரம்பிக்கலை."

"சரி! வாழ்க்கையில் வெற்றி பெற என்ன வழி? நீ உன்னோட ஐடியாவைச் சொல்லு பார்க்கலாம்."



"வாழ்க்கையில் வெற்றி பெற, அதிர்ஷ்டம் வேணும் சித்தப்பா!" என்றாள்.

"என்னைக்கு வாழ்க்கையில் முன்னேற அதிர்ஷ்டம் வேணும்னு நினைச்சியோ, அப்பவே நீ முன்னேற மாட்டேன்னு தெரியுது" என்று அண்ணி கிண்டலடிக்க சிரித்தோம்.

"உழைப்பு" என்றார்கள் அண்ணி.

"நீ கூடத்தான் தினசரி பதினாலு மணி நேரம் உழைக்கிறே! என்ன பிரயோஜனம்? சமையல், துணி துவைக்கிற, வீட்டைப் பார்க்கற, உழைப்பாலே முன்னேற முடியாது" என்றான் அண்ணன்.

"நீ சொல்லு பார்ப்போம்."

"திறமைதான் வாழ்க்கையில் வெற்றி பெற ஒரே வழி. ஆனால் என்கிட்ட இருக்கிற திறமையைக் கண்டுபிடிக்கிற திறமை என் பாஸுக்கு இல்லை. அதுதான் பிரச்னையே!" என்றான் அண்ணன்.

"அப்படிப் போடுங்க!" என்று அண்ணி சொல்ல, எல்லோரும் சிரித்தோம்.

காரை ஓர் ஓரமாக நிறுத்தினான். "ஒரு நிமிஷம். நான் போய் ஒரு எஸ்.டி.டி. பண்ணிட்டு வந்துடறேன்" என்று இறங்கிப் போனான். நான் காரை விட்டு இறங்கினேன்.

கடை சிறியதாக இருந்தது. ஃபோட்டோகாப்பி, டைப்பிங் என்று எல்லாம் சேர்ந்து இருந்தது. அண்ணன் டெலிபோன் பேசப் போனான். கடையிலிருந்தவர் என்னையே பார்த்துக் கொண்டிருந்தார். எழுந்து என்னைப் பார்த்து வந்தார்.

"நீ சங்கர்தானே?" என்றார்.

"நீங்க..." என்று இழுத்தேன். அவரை கவனித்துப் பார்த்தேன். அழுக்கு வேட்டி கட்டியிருந்தார். சட்டையை வெறுமனே மாட்டியிருந்தார். பட்டன் போடவில்லை. தலை வழுக்கை. இருந்த முடியும் நரைத்துப் போயிருந்தது. முகம் மட்டும் பழகிய முகமாய்த் தோன்றியது. நான் யோசிக்க முயற்சி செய்யும் போதே "நான்தான் செல்வம்" என்று அவர் சொல்ல, நான் அதிர்ந்து போனேன். செல்வமா இது? என்னை விட பத்து வயது மூத்தவன் போல் இருந்தான்.

செயிண்ட் சேவியர்ஸ் ஸ்கூலில் என்னுடன் படித்தவன்தான் இந்த செல்வம். நன்றாகப் படிப்பான். கணக்கில் புலி. அது மட்டுமல்ல, நன்றாகச் சொல்லிக் கொடுப்பான். எப்போதும் அவன்தான் முதல் ராங்க். அம்மா செல்வத்தைப் பார்த்தது கிடையாது. ஆனால் செல்வத்தின் மார்க்தான் அம்மாவின் அளவுகோல். நான் செல்வத்தை முந்த வேண்டும் என்பது அம்மாவின் ஆசை. ஆனால் அது கடைசிவரை நிறைவேறவில்லை. எப்போதும் அவன்தான் முதல் ராங்க். எனக்கு அவன் மீது, படிப்பு விஷயத்தில் பொறாமையிருந்தது. ஆனாலும் என்னுடைய நண்பன் அவன்தான்.

எங்கள் இருவருக்கும் சினிமாவும், அரசியலும் ரொம்பவே பிடித்திருந்தது. செல்வம் அப்போதே வித்தியாசமான சினிமா ரசிகன். நாங்களெல்லாம் ரஜினியின் 'தர்ம யுத்தம்', 'அன்னை ஓர் ஆலயம்' என்று ரசிக்கும் போது, அவன் மட்டும் 'ஆறிலிருந்து அறுபது வரை', 'ஜானி'தான் சிறந்த படங்கள் என்று சொல்லுவான். அவன் தி.மு.க. அனுதாபி. நானோ சிறு வயதிலேயே 'அடிமைப் பெண்' விளம்பர வண்டி பின்னால் போய், பொருட்காட்சியில் தொலைந்து போனவன். அண்ணன்தான் என்னைப் பிடித்துக் கொண்டு வந்தானாம். அம்மா சொல்லக் கேள்வி. மதியம் சாப்பாட்டு நேரத்தில் நான் அ.தி.மு.கவுக்கு ஆதரவாகப் பேச, செல்வம் தி.மு.கவுக்குப் பேச அதைக் கேட்க ஒரு கூட்டமே நிற்கும்.

பள்ளி இறுதித் தேர்விலும் செல்வமே ஸ்கூல் முதல் மாணவனாக வந்தான். அவன் சேவியர்ஸில் தொடர்ந்து படிக்க, நான் வேறு ஸ்கூலுக்குப் போனேன். பிறகு அவனை அதிகம் பார்க்க வாய்ப்பில்லாமல் போனது. அவ்வப்போது சினிமாத் தியேட்டரிலும் குமரன் கோயிலிலும் பார்ப்பதுண்டு. பி.காம் படித்துக் கொண்டிருந்தான். ஆடிட்டராகப் போவதாகச் சொல்லிக் கொண்டிருப்பான். பிறகு அப்படியே தொடர்பு விட்டுப் போனது. செல்வம் மட்டுமல்ல, என்னுடைய பல நண்பர்கள் எங்கிருக்கிறார்கள் என்றே எனக்குத் தெரியாது. காலம் ஒரு நதி போல் ஓடிக் கொண்டேயிருக்கிறது. அதில் மிதக்கும் இரண்டு மரத்துண்டுகள் ஒட்டிக் கொள்வது போல், நண்பர்கள் அமைகிறார்கள். அவை

# சகலமும் ஆனவர்!

நான் பஞ்சாப் நேஷனல் வங்கியில் பணிபுரிகிறேன். என் தாயார் ஸ்ரீபாபாவின் பரமபக்தை. பெங்களூரிலிருந்து வைட் ஃபீல்டுக்கு நடந்தே சென்று விடுவார். "பாபாதான் மாதா, பிதா, குரு, தெய்வம்... நமக்கு சகலமும்" என்று அடையாளம் காட்டினார். என்னுடைய அனுபவங்களாலும் அந்தப் பேரருளைக் கண்டு கொண்டேன். ஸ்ரீசத்திய சாய் கோயில்களில் நிலவும் ஒழுங்கு, அமைதி, சுத்தம், இனிய சூழல் எல்லாமே என்னைக் கவர்ந்த விஷயங்கள். அன்பு ஒரு முதலீடு. எவ்வளவு போடுகிறோமோ அதை அவ்வளவு வட்டியோடு திரும்பப் பெறலாம் என்று நாளும் உணர்த்தி வருகிறார் ஸ்ரீ பாபா.



• கே.வி.பாலசந்தர்

பிரிவதும், மீண்டும் சந்திப்பதும் நதியின் போக்கிலுள்ளது.

"எங்க இருக்க? என்ன பண்ணுகிற?" என்று வாஞ்சையோடு கேட்டான். கனடாவில் இருப்பதையும், விடுமுறைக்கு வந்திருப்பதையும் சொன்னேன்.

அவனுடைய கதையைச் சொன்னான். அவன் நினைத்தபடி ஆடிட்டராக முடியவில்லை. பி.காம் முடித்துவிட்டு ஆடிட்டராக முயற்சித்திருக்கிறான். சும்மாவா? பல பரீட்சைகள் தாண்ட வேண்டுமே! அவன் தந்தை இறந்து போக, குடும்பப் பொறுப்பு செல்வம் தலையில் இறங்கியிருக்கிறது. உடனே கிடைத்த வேலைக்குப் போயிருக்கிறான். சென்னையில் தனியார் நிறுவனத்தில் வேலை. இதற்கிடையில் கல்யாணம். மனைவி அவ்வளவு ஆரோக்கியமானவள் இல்லை. வீட்டு வாடகை, மாநகரத்துச் செலவுகள், ஆஸ்பத்திரிச் செலவுகள் என்று செலவு மயம். செல்வத்தால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. திருநெல்வேலிக்கே திரும்பி விட்டான்.

"இங்கு சொந்த வீடு. இந்த இடம் கூட சொந்த இடம் தான். இதுல வர்ற வாடகை, என் சம்பளம் எல்லாமே சென்னையின் செலவுக்கு கட்டுப்படியாகவில்லை. இங்க வாடகை கிடையாது. செலவு போகக் கையில் காசு நிக்குது. நல்ல காத்து, தண்ணீர்ப் பிரச்னை கிடையாது. பேசாமல் ஊரோடு வந்துட்டேன். அமைதியா வாழ்க்கை போகுது" என்றான். சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தேன்.

ஸ்ரீசாயி அனுபவம்!

அண்ணன் டெலிபோன் பேசி விட்டு திரும்பி வந்தான். செல்வத்தை அறிமுகப்படுத்தினேன். வீட்டுக்குக் கூப்பிட்டான்.

"கோவிலுக்குப் போய்க் கொண்டிருக்கிறோம். இன்னொரு நாள் வர்றேன்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினேன்.

அவ்வளவு நன்றாகப் படித்த செல்வம், சாதாரணக் கடை வைக்க நேர்ந்ததைப் பற்றி புலம்பிக் கொண்டே வந்தேன்.

''சித்தப்பா! நீங்க இப்ப பதில் சொல்லுங்க. வாழ்க்கையில் வெற்றி பெற என்ன வழி? நீங்க வாழ்க்கையில் வெற்றி பெற்றதற்கும், உங்க ப்ரெண்ட் தோத்துப் போனதற்கும் என்ன காரணம்?" சட்டென்று கேட்டான் பானு.

நான் கொஞ்ச நேரம் அமைதியாக இருந்தேன்.

"செல்வத்தைப் பார்த்த பிறகு ஒரு விஷயம் எனக்குப் புரிஞ்சுது. வெற்றி, தோல்வின்னு முடிவு கட்ட, வாழ்க்கை என்பது பந்தயமில்லை. அது ஓர் அனுபவம். ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு விதமான அனுபவம் ஏற்படுது. எல்லோரும் உலகின் வெவ்வேறு தளங்களில் இயங்குகிறோம். சில தளங்களில் இருப்பவர்கள் மட்டும் வெற்றி பெற்றவர்கள், மற்ற தளங்களில் இருப்பவர்கள் தோல்வி அடைந்தவர்கள் என்று சொல்ல முடியாது. நான் உனக்கு 'வாழ்க்கையில் வெற்றி பெற' புத்தகத்தைவிட, வேறு ஏதாவது நல்ல புத்தகம் வாங்கிட்டு வந்திருக்கலாம் என்று தோன்றுகிறது" என்றேன்.

பானுவுக்கு நான் என்ன பேசினேன் என்று புரியவில்லை. தன் அப்பாவைப் பார்த்தாள்.

"ஏண்டா தத்துவங்களைச் சொல்லி அவனைக் குழப்புறே! நல்லாப் படிச்சா வாழ்க்கையில் வெற்றி பெறலாம். நீ ஒழுங்காகப் படி. வாழ்க்கையில் வெற்றி பெறலாம்" என்றான் அண்ணன்.

நான் எதுவும் பேசவில்லை. கார் நெல்லையப்பர் கோவிலைப் பார்க்க போய்க் கொண்டிருந்தது.

செல்வம் பின்னோக்கிப் போய்க் கொண்டிருந்தான். ●

"ஜாப்"
"கிராஸ்"
"நீ ஸ்ட்ரைக்"

கட்டளைக்கு ஏற்ப, உற்சாகமாகக் குதித்து, கை காலை நீட்டி மடக்கி ஆடுகிறார்கள், வளைந்து, குனிந்து தாவுகிறார்கள். 'திடும் திடும்' என்ற மேற்கத்திய இசைக்கு ஏற்ப, எகிறிச் சுழல்கிறார்கள். எல்லாமே நவீனச் சூழல்! காற்றில் குத்துகளும், உதைகளும் பறக்க, ஆண்களும் பெண்களுமாய் கராத்தேயும் வெஸ்டர்ன் டான்ஸும் இணைந்த புதுமையான 'சால்ஸா' என்ற உடற்பயிற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

**சா**ல்ஸா!

பெயரைக் கேட்டால் ஏதோ பஞ்சாபி உணவு போலவோ, ஹிந்துஸ்தானி ராகம் போலவோ இருக்கிறது. ஆனால் லத்தீன் பாணி ஏரோபிக்ஸாம்! இந்தக் காலத்து இளசுகளின் லேட்டஸ்ட் ஃபிட்னெஸ் கிரேஸ்!

" 'ஜிம்முக்குப் போய் உடற்பயிற்சி செய்து, 'ஜம்'முன்னு இருக்க ஆசைதான்! ஆனால் பெரிய பெரிய மிஷினெல்லாம் ஏறி 'வறட்டு வறட்டு'னு ஓடணும். இரும்பு உருளையெல்லாம் தூக்கணும். பெரிய போர்' என்று சலித்துக் கொள்பவர்களை மோடிவேட் செய்ய உதவும் உடற்பயிற்சி இது. தனியா செய்யாமல்,

# சால்ஸா!







* அஜித் ஷெட்டி

ஒரு குழுவா செய்யும் போது, சிரமமே தெரியாது. உற்சாகமும் கொப்பளிக்கும்'' என்றார் சென்னை, ஆழ்வார்பேட்டை 'ஃபிட்னெஸ் ஒன்' ஜிம் உடற்பயிற்சி இயக்குநர் அஜித் ஷெட்டி.

''டி.டி.கே.வாசுவின் மனைவி, ஸ்டீனா வாசு ஆரம்பித்து வைத்த ஏரோபிக்ஸ் வகை உடற்பயிற்சி இது! அவர் கிக் பாக்ஸிங்கும் யோகாவும் கலந்து பயன் படுத்துகிறார். 'சால்ஸா'வில் கராத்தேயும் ஸ்ட்ரெச்சஸும் உபயோகிக்கப்படு கின்றன. ஜாகிங், ரன்னிங் போல இதுவும் கார்டியோ வாஸ்குலர் பயிற்சி தான்! வார்ம் அப், ஸ்ட்ரெச்சஸ் அண்ட் ரிலாக்ஸேஷன், ஹார்ட் ரேட் அப், ஹை இன்டன்ஸிடி வர்க் அவுட், கூலிங் டவுன் என முறைப்படி ஸ்டெப்ஸ் உண்டு. உடற்பயிற்சிக் கருவிகளில் அடிபடும் அபாயமும் இல்லை. ஜாலியா, குதியாட்டம் போட்டுக் கிட்டே எடையைக் குறைக்கலாம்... ஆரோக்கிய வாழ்வு வாழலாம்'' என்றார் சால்ஸா ட்ரெயினர் கமலேஷ்.

**நா**ற்பத்தைந்து நிமிஷம் ஆடி, ஓடி வியர்த்துப் போய் வந்தவர்களை நிறுத்தி இரண்டு வார்த்தை பேசச் செய்தோம்.

''ஸ்ட்ரெயிட் ஜீன்ஸ் போடறதுக்கு ஏற்ப, மெல்லிசா இருக்கணும். அதே சமயம், ஸ்டாமினாவும் இருக்கணும்னா, 'சால்ஸா'தான் சிறந்த சாய்ஸ். ரிக்கி மார்டின், ஜெனிபர் லோபஸ் எல்லாம் பாருங்க. ஆடிக்கிட்டே பாடுவாங்க. நாங்க பாட்டுக்கு ஏற்ப ஆடறோம். இதுவும் எம்.டீ.வி. கல்சர்தான். களைப்பே தெரியாமல், அழகாய்



"இளைக்கலாம்" என்கிறார் மிஸ் ஸ்மிதா!

"எனக்கு தை மாசம் கல்யாணம். கொஞ்சம் குண்டா இருக்கேன்... அதைக் குறைக்கத்தான் இங்கே வந்தேன். வந்து ஒரு மாசம் தான் ஆச்சு! நல்லா மெலிஞ்சுட்டேன்" என்றார் சந்தோஷ மின்னலாக வெடித்த மது.

'ஃபிட்னெஸ் ஒன்' ஜிம்மின் உரிமையாளர் விவேக் ஆனந்த், அமெரிக்காவில் பைலட்டாக வேலை செய்தவர். கடும் முதுகு வலியால் அவதிப்பட்ட இவர், அமெரிக்க ஜிம் ஒன்றில் பயிற்சி பெற்றதில், வலியிலிருந்து முழு நிவாரணம் பெற்றிருக்கிறார். அப்படியொரு விஞ்ஞானபூர்வமான ஜிம்மை, இந்தியாவில் ஆரம்பிக்கும் எண்ணத்தால் உந்தப்பட்டு, பன்னிரண்டாயிரம் சதுர அடியில், அமெரிக்க பாணி ஃபிட்னெஸ் ஜிம் தொடங்கியுள்ளார். அஜித் ஷெட்டியும் அமெரிக்கன் கவுன்ஸில் ஆஃப் எக்சர்ஸைஸில் பட்டம் பெற்றவர் என்பதால், கலந்தடிச்சுக் கலக்குகிறார்களாம்.

**அழகாய் இளைக்க விவேக் தரும் சில குறிப்புகள்:**

* முறையான டயட் முக்கியம். கார்போஹைட்ரேட் உணவுகளை, மாலை ஏழரை மணிக்குள் சாப்பிட்டு விட வேண்டும்.

* 'உடம்பு இளைக்கணும்' என்ற வெறியில் அதிகம் வருத்திக் கொள்ளக் கூடாது. மாசத்துக்கு 2, 3 கிலோ மட்டுமே குறைக்க முடியும். அதுவும் படிப்படியாக என்ற உண்மையை உணர வேண்டும்!

* உடற் பயிற்சியின் போது, உரக்கப் பேச முடியாத நிலை வரும்போது, நிறுத்திக் கொண்டு விட வேண்டும். இதை 'டாக் டெஸ்ட்' (talk test) என்போம். மீறி இயங்கினால் எனர்ஜி விரயமாகும்.

* காலை உணவை நிறுத்திவிட்டால் எடை குறையும் என்று சிலர் நினைக்கிறார்கள். இது மிகவும் தவறான கருத்து! சாப்பிடா விட்டால்தான் பிரச்னையே! முட்டையின் வெள்ளைக் கரு, ஓட்ஸ் மீல், பால், சுண்டல், பழங்கள் என சாப்பிடலாம்.

- ஐஸ்

படங்கள் : ஸ்ரீஹரி

## ஸ்ரீசாயி அனுபவம்!

### சேவை மகத்துவம்!

சுவாமி, கல்விக்கும், வைத்தியத்துக்கும், எத்தனை முக்கியத்துவம் அளிக்கிறார் என்பது புட்டபர்த்திக்குப் போனவர்களுக்குத் தெரியும். அறிவொளியும், அமைதியும் கொண்டவர்களாக பிரசாந்தி மாணவர்கள் உருவாக்கப்படுகிறார்கள். அங்கே படித்த என் பிள்ளைகள் இன்று உயர்ந்த நிலையில் இருக்கிறார்கள். வைத்தியத்தைப் பற்றியோ கேட்கவே வேண்டாம். லட்சக் கணக்கில் செலவாகும் நுணுக்கமான ஆபரேஷன்கள்கூட இங்கே பத்து ரூபாய் செலவுகூட இல்லாமல் நடக்கிறது. சுயநலமற்ற சேவையை அன்போடு செய்து வரும் பாபாவின் சாதனை மகத்தானது. என்னை, ஸ்ரீசாயி ஆட்கொண்டதும் அதனால்தான்.



*டாக்டர் எஸ். ஆனந்தன்

# இலக்கியக் கோலம்!


• நரசய்யா


• முகுந்தன்


• மா.ரா. அரசு


• அநுத்தமா

முதுபெரும் எழுத்தாளர் அநுத்தமா பற்றிப் பலர் அறியாத தகவல் : அவர் ரங்கோலிக் கலைஞரும் கூட. மீரா கையில் தம்பூராவோடு பாடலிசைக்க, குத்து விளக்கின் சுடரில் கண்ணன் முகம் ஒளிவீசும் காட்சியை ரங்கோலிச் சித்திரமாக வரைந்து, பார்த்தவர்களை பிரமிக்க வைத்தவர். இப்போது ரங்கோலி தீட்டுவதில்லை. ஆனால் பல ஆண்டுக்குப் பின் புது நாவலொன்றை எழுதிவருகிறார்.

லட்சுமி கிருஷ்ணமூர்த்தியின் வாசகர் வட்ட வெளியீடு, நரசய்யாவின் 'கடலோடி' பயண நூல். மீண்டும் அவர் கடல் சார்ந்த ஒரு நூல் எழுதுகிறார். தலைப்பு : 'கடல்வழி வணிகம்'. இலக்கியச் சான்று, கல்வெட்டு, நாணய வழிச் சான்று என எல்லாவற்றையும் தொகுத்து, ஆய்வு நூலாக எழுதுகிறாராம். பழனியப்பா பிரதர்ஸ் வெளியிடும் இந்நூலுக்கு அணிந்துரை தர விருப்பவர் தொண்ணூற்றி ஆறு வயது இளைஞர் சிட்டி.

இலக்கியச் சிந்தனை வெளியிடும் முன்னோடி எழுத்தாளர் ஆய்வு நூல் வரிசையில், அடுத்த நூல் த.நா. குமாரஸ்வாமி பற்றியது. த.நா. குமாரஸ்வாமி பற்றி ஏற்கெனவே சாகித்ய அகாதமிக்காக அவரது புதல்வர் அஸ்வின் குமார் ஒரு நூல் எழுதியிருக்கிறார். இலக்கியச் சிந்தனைக்காக எழுதுபவர், எழுத்தாளர் முகுந்தன்.

டாக்டர் மா. இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மைய இயக்குநர், மா.ரா. அரசு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தோடு இணைந்து பத்து கருத்தரங்குகள் நடத்தியுள்ளார். ஐந்து கருத்தரங்கக் கட்டுரைத் தொகுதிகள் வந்துவிட்டன. மேலும் ஐந்து தொகுதிகள் தயாராகின்றன. வரவிருக்கும் தொகுதிகளில் நாற்பத்தி ஐந்து இதழ்கள் பற்றிய ஆய்வுகள் இடம் பெறும். ஆய்வு மையம், தமிழின் இன்றியமையாத இதழ்கள் பற்றிய விவரத் தொகுப்பாக, இதழியல் களஞ்சியம் ஒன்றையும் உருவாக்கி வருகிறது.

- திருப்பூர் கிருஷ்ணன்

# எங்க ஊர் பிள்ளையார்

**கா**ஞ்சிபுரம் பேருந்து நிலையம் அருகில் உலகளந்த பெருமாள் கோயிலில் சங்கு பாணி பிள்ளையார் உள்ளார். இவருக்குத் தொப்பை இல்லை. சப்பாணிப் பிள்ளையார் என்று பெயர் மருவியுள்ளது.

சங்கிலிருந்து தோன்றிய சங்கு பாணி பிள்ளையார், காலப் போக்கில் சப் பாணிப் பிள்ளையார் ஆகிவிட்டார் போலும்.

# இன்று போய் நாளை வா!

விஷ்ணுவிடம் பிரம்மா ஒரு விநாயகரைப் பிரதிஷ்டை செய்ய வேண்டினார். திருமாலும் தம் கைச் சங்கிலிருந்து உற்பத்தி செய்தார்.

சனி பகவான் இப்பிள்ளையாரை நெருங்க விரும்பினார். பிள்ளையாரின் முதுகில் 'இன்று போய் நாளை வா' என்று எழுதப்பட்டிருந்தது அன்று திரும்பி வந்த சனி

• கும்பகோணம் ஸ்ரீ ஜெகந்நாத பிள்ளையார்





பகவான், மறுநாள் திரும்பி வந்து பார்த்து 'நாளை வா' என்று முதுகில் எழுதியதைக் கண்டு திரும்பினார். இவ்வாறு தினமும் பிள்ளையாரை நெருங்க, அதே எழுத்துக்களைப் பார்த்து தினமும் பின் வாங்கினார். இன்றுவரை சனி பகவான் விநாயகரை நெருங்க முடியவில்லையாம்.

விநாயகரின் அருளை உணர்ந்த சனி பகவான், அன்று முதல் விநாயகரின் பக்தர்களையும் நெருங்குவதில்லை என்பது நம்பிக்கை.

இவ்விதமே இங்குள்ள விநாயகரைப் பார்த்தால், ஆறு அடி உயர காக்கை வாகனத்தில் கம்பீரமாகக் காட்சியளிப்பார். நான்கு கைகளிலும் வில், அம்பு வைத்துள்ளார்.

சங்கடஹர சதுர்த்தியன்று காலை முதல் இரவு வரை விரதம் இருந்து, மாலை சன்னிதியில் நெய் விளக்கேற்றி, பதினொரு முறை வலம் வந்து, சந்திரனைப் பார்த்து உப்பில்லாப் பலகாரம் செய்ய வேண்டும். கேட்ட வரங் கொடுக்கும் சக்தி வாய்ந்தவர்.

பேச்சுவராத குழந்தைகளை இங்கு கொண்டு வந்து நெற் பொரி படைத்து வேண்டினால் பேச்சுத் திறன் வளரும்.

சுயம்பு பிள்ளையார். சுற்றி ஷெண்பகத் தோட்டம். காஞ்சிப் பெரியவர் வெளியூர் போகும்முன் இந்த விநாயகரை தரிசித்துத்தான் பிரயாணத்தைத் தொடங்குவார். பெரியவர் திரும்பும்

போது தேங்காய் உடைப்பது வழக்கம்.

- தி.த. கேசவன், பாண்டிச்சேரி

## தமிழ் நிகண்டு கூறும் விநாயகரின் பதின்மூன்று பெயர்கள்

அங்குச பாசமேந்தி, அம்பிகை தனையன், முன்னோன், ஐங்கரன், மூத்தோன், ஒற்றைமருப்பினன், ஏரம்பன், கங்கைபெற்றோன், முக்கண்ணன், கணபதி, ஈசன்மைந்தன், கயமுகன், ஆகுவாகனன்.

- வயலூரர் மு. இராமசாமி

மண்ணால் செய்த விநாயகரைப் பூஜித்தால் நற்பதவி கிட்டும்.

புற்று மண்ணால் செய்த விநாயகரைப் பூஜித்தால் லாபம் கிடைக்கும்.

வெல்லத்தால் செய்த பிள்ளையாரைப் பூஜித்தால் சௌபாக்கியம் கிட்டும்.

உப்பால் செய்த பிள்ளையாரைப் பூஜித்தால் சத்துருவை வெற்றி பெறலாம்.

கல்லால் செய்த விநாயகரைப் பூஜித்தால் சகல நலன்களும் ஏற்படும்.

வெள்ளெருக்கால் செய்த விநாயகரைப் பூஜித்தால் அஷ்ட ஐஸ்வர்யமும் கிட்டும்.

மாவால் செய்த விநாயகரைப் பூஜித்தால் வெற்றி கிட்டும்.

- உஷா, சென்னை - 4

கும்பகோணம் மகாமகக் குளத்தின் தென்பாகத்தில் எழுந்தருளி அருள் பாலித்து வரும் ஸ்ரீ ஜெகந்நாத பிள்ளையாருக்கு, நவராத்திரி பூஜை மிக விசேஷம். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அலங்காரம் நடைபெறுகிறது.

தமிழ் நாட்டிலேயே தங்கக் கலச விமானம் விளங்கும் ராஜ கோபுரத்துடன் கூடிய பிள்ளையார் கோயில் இது ஒன்றுதான். சௌராஷ்டிரா சமூகத்தாருக்குச் சொந்தமான இந்தக் கோயிலின் அனைத்து நிகழ்ச்சிகளையும் டாக்டர் ராயா கோவிந்தராஜன் முன்நின்று சிறப்புடன் நடத்தி வருகிறார்.

தகவல், படம்:
பிரசன்னா .கே

# ஸ்ரீசாயி அனுபவம்!

## "பாபா கொடுப்பாருப்பா!"

நான் தாய்வீடாக நினைப்பது புட்டபர்த்தியைத்தான். இதுவரை ஏழெட்டு தடவை போய்விட்டு வந்து விட்டேன். தாய் மடியில் கிடைக்கும் அன்பும் ஆதரவும் அங்கே காணலாம். ஒருமுறை சென்னையில் உள்ள 'சுந்தரம்' போயிருந்தோம். என்னுடன் என்னுடைய இரண்டரை வயது மகன் அபிலாஷும் வந்திருந்தான். என்னுடன் அமர்ந்திருந்த பெண்கள் அனைவரும் கைக் கடியாரம் அணிந்திருந்ததைப் பார்த்தவனுக்கு என்ன தோன்றியதோ என்னவோ, "அம்மா, நீ ஏம்மா வாச் கட்டிக்கலை?" என்றான் மழலையாக. "பாபா கொடுப்பாருப்பா..." என்று சொல்லிவிட்டு பஜனையில் மூழ்கிவிட்டேன். பஜனை முடிந்து ஆரத்தி காட்டும் சமயம், மணலைக் கிளறிக் கொண்டிருந்த என் மகன், "அம்மா... பாபா வாட்சு கொடுத்துட்டாரும்மா" என்றான். மணலில் புதைந்திருந்தது ஒரு லேடீஸ் வாச்! அதைச் சுற்றியிருந்தவர்களிடம் காட்டி விசாரித்தேன். "எங்களுடையதில்லை" என்று சொல்லிவிட்டார்கள். பாபாவே தந்திருப்பதாக நினைத்து, அந்தக் கைகடியாரத்தை இன்னமும் பொக்கிஷமாக வைத்திருக்கிறேன்.



• பத்மா



## அமுதசுரபி - தீபாவளி மலர் 2004

எதனுடன் எதை எவ்வளவு கலந்தால் படைப்புக்குச் சுவை கூடும் என்பது அனுபவம் தரும் கைப்பக்குவம். பெரும்பாலும் வயதிலும் அனுபவத்திலும் மூத்தவர்களுக்கே உரிமையானது அது. அதே போல இலக்கியம், ஆன்மிகம், யதார்த்த உலகம், ஓவியம், கவிதை என அனைத்தையும் திகட்டாமல் கலந்து, சிந்தனையையும் தூண்டி, பெயருக்கேற்றபடி புரட்டப் புரட்டப் புதுப்புது வண்ணங்கள் காட்டும் எண்ண ஓவியங்களுடன், உயிர் கொடுக்கும் வண்ண ஓவியங்களுடன் சேர்ந்து தொகுத்த படைப்பு.

**அமுதசுரபி, ஏ-7, 2ம் அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு, சென்னை - 600 102.**
**விலை ரூ. 75.**



## கலைமகள் - தீபாவளி மலர் 2004

தமிழென்பது இயல் இசை நாடகம். அந்த முத்தமிழிலும் மூழ்கி முத்துக்களை எடுத்துத் தொடுத்து, ஆன்மிகம், இசை, கவிதை, நாடகம், அறிவியல், நேர்காணல் என்று சரம் சரமாய்த் தொகுத்த இலக்கிய மாலை. அட்டையில் வாமனன் திரிவிக்கிரமனாகி உயர்ந்து விண்ணையும் மண்ணையும் அளந்தது போல், நம் எண்ணத்தையும் உயர்த்தும் முத்தமிழ் மலர். குடியரசுத் தலைவரின் கட்டுரையும், சிறுவர் சிறுமியருக்கான பகுதியும் சிறப்பு.

**கலைமகள்,**
**1, சமஸ்கிருதக் கல்லூரி சாலை, மயிலாப்பூர், சென்னை - 600 004.**
**விலை ரூ. 20**

# புக் பேங்க்

## விஜயபாரதம் - தீபாவளிச் சிறப்பிதழ் - 2 பாகங்கள்

தேசபக்தியும் தெய்வ பக்தியும் வேறு வேறு அல்ல என்று வாழ்ந்து காட்டியவன் பாரதி. அந்த வழியில் பாரதத்தின் பெருமையையும், பரம்பொருளின் அருமையையும் ஒன்றாய்ச் சேர்த்து தொகுத்த கட்டுரைகள், கவிதைகள், சிறுகதைகள், நேர் காணல்கள் என்று மலர்ந்திருக்கும் இரட்டை மலர்கள். சித்திரங்களிலும் புகைப் படங்களிலும் வண்ணங்கள் சற்றே குறைந்தாலும், காவி வண்ணம் மட்டும் அனைத்திலும் தூக்கலாகத் தெரிகிறது. தேசமும் தெய்வமும் ஒருங்கே பக்தி செலுத்த வேண்டியவை என்று உறுதியாய்க் கூறும் படைப்பு.

**விஜய பாரதம்,**
**12, எம்.வி.சாலை, பஞ்சவடி, சேத்துப்பட்டு, சென்னை - 500 031.**
**விலை ரூ.50**



## தினமணி - தீபாவளி மலர் 2004

ஆன்மிக அன்பர்களுக்கு ஆலய தரிசனமும், அருள்தரும் வண்ணப் படங்களும், அறிவுஜீவிகளுக்கும் அன்பைத் தேடுவதற்கும் அப்துல் கலாமின் கவிதையும், போகிற போக்கில் வாசிப்பவருக்கு ஜனரஞ்சகக் கதைகளும், திரையுலக, எழுத்துலக, விளையாட்டுலகப் பிரமுகர்களின் கட்டுரைகளும் என, எல்லாத் தரப்பு வாசகரையும் திருப்திப்படுத்தும் விதமாக வெளியாகியிருக்கிறது தினமணி தீபாவளி மலர். பொழுதைப் போக்கவும் படிக்கலாம், உலகைப் புரிந்து கொள்ளவும் படிக்கலாம்.

**தினமணி,**
**அண்ணாசாலை, சென்னை - 600 002.**
**விலை ரூ.20**

**- விஷ்வக்**



**ச**மீபத்தில், குடியரசுத் தலைவர் அப்துல் கலாமைச் சந்தித்துத் திரும்பியிருக்கிறார் பிரபல கர்நாடக இசைப் பாடகி அருணா சாய்ராம்.

"ஓர் இசை ஆல்பத்தின் ஒலிப்பதிவில் பிஸியாக இருந்தேன். அப்போதுதான் அந்தத் தொலைபேசி அழைப்பு வந்தது. நான் நீண்ட நாட்களாக எதிர்பார்த்த மேதகு அழைப்பு அது! வியப்பும் சந்தோஷமும் அகலாத நிலையிலேயே ஒரு யோசனை உதித்தது. உடனே, பாரதியார் பாடிய 'அல்லா, அல்லா' பாடலைப் பாடி, பிரத்யேக சிடியில் பதிவு செய்து கொண்டு டில்லிக்குக் கிளம்பத் தயாராகிவிட்டேன்.

**புது டில்லி, ராஷ்ட்ரபதி பவன் :**

கம்பீரமாக நின்ற அந்தக் கட்டடத்துக்குள் நுழையும்போது, இனம் புரியாத த்ரில்! வழக்கமான செக்யூரிடி சமாசாரங்கள் நடைபெற்றதும், என்னை ஒரு பெரிய அறையில் அமர வைத்தனர். அங்கே, வெளிநாட்டுப் பிரமுகர்கள், உள்ளூர் முக்கியஸ்தர்கள் என கூட்டம் நிரம்பி வழிந்தது. சரி, நாமும் இந்த கும்பலோடு கோவிந்தாவாக ஒரு கும்பிடு போட்டுப் போக நேரிடுமோ என்னவோ என்று நான் யோசித்துக் கொண்டிருக்கும்போதே, பாதுகாப்பு அலுவலகர்கள் என்னை, வேறொரு தனி அறைக்குக் கூட்டிச் சென்றார்கள்.

# கண்ணீரில் கரைந்த

அழகான உள் அலங்காரம் செய்யப்பட்ட சின்ன அறை. போய் அமர்ந்த உடனேயே, சூடான சமோசா, மால்புரா ஸ்வீட், சுவையான தேநீர், படு பவ்யமாகப் பரிமாறினார்கள்.

"பரவாயில்லை. டீ மட்டும் போதும்'' என்று நான் தடுத்தபோது, "நீங்கள் எங்கள் சிறப்பு விருந்தினர். இது உங்களுக்காக ஸ்பெஷலாகத் தயாரிக்கப்பட்டது'' என்று அன்போடு உபசரித்தனர்.

சிற்றுண்டியை ரசித்துச் சாப்பிட்டதும், வேறொரு அறைக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே, மலர்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தார் குடியரசுத் தலைவர் அப்துல் கலாம். நான் வணங்கிக் கொண்டே உள்ளே நுழைந்தேன். அவரும் எழுந்து நின்று வணங்கி வரவேற்றார். பரஸ்பர நலம் விசாரிப்பு நடந்தது.

"உங்களுக்கு உங்க அம்மாதான் முதல் குரு இல்லையா? பூர்வீகம் திருவாரூர் தானே?'' என்று 'டக்டக்' என்று கேட்க, எனக்கோ ஒரே ஆச்சர்யம்.

பிறகுதான் தெரிந்தது, என்னைப் பற்றிய அனைத்து விஷயங்களையும் கம்ப்யூட்டரில் சேகரித்து வைத்திருக்கிறார் என்பது.

"மியூஸிக் ஹீல்ஸ் தி ஸோல். எனக்கு 'எந்தரோ மகானு பாவுலு' கீர்த்தனை ரொம்பப் பிடிக்கும். அந்த ஸ்ரீராகம் பாடலை, வீணையிலேகூட வாசிப்பேன்'' என்றார்.

அப்துல் கலாம்ஜி, வீணை வாசிப்பார் என்பது எனக்குப் புதிய செய்தி!

**பே**ச்சு அப்படியே கவிதைக்குத் தாவியது. அண்மையில், திருவனந்தபுரத்தில் மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைகளின் பள்ளி விழாவில் கலந்து கொண்ட கலாம்ஜி, மனம் நெகிழ்ந்த நிலையில் கவிதை ஒன்று எழுதி, விழாவில் வாசித்திருக்கிறார். அந்தக் கவிதையை மலையாளத்தில் மொழி பெயர்த்து, அந்தக் குழந்தைகளை வைத்தே பாட வைத்து, ஒலிப்பதிவு செய்து, குடியரசுத் தலைவருக்கு, கேஸட்டாக அனுப்பியிருக்கின்றனர் விழாக்குழுவினர்.

"உங்களுக்கு நேரமிருக்கா?'' என்று கேட்டுவிட்டு, அந்தக் கவிதைப் பாடலை போட்டுக் காட்டினார். 'இறைவா, அறிவு



✱ அருணா சாய்ராம்

தீபமேற்று' என்ற அந்தப் பாடலின் வரிகளும், மெட்டும் மனத்தைப் பிசைய, என் கண்கள் கசிந்தன. மெள்ள, துடைத்தபடியே தலைநிமிர்ந்தால், அவரும் மௌனமாகக் கண்ணீர் சொரிந்தபடி இருந்தார்.

இந்திய நாட்டின் தலைமகன். அறிவுப் பெருங்கடல்! ஆனால் எத்தகைய பிஞ்சு



# கலாம்!

உள்ளம்!

சில விநாடிகளில் இயல்பாகிவிட்டார். "ஸாரி, உங்க மூடைக் கெடுத்துட்டேன்" என்று மன்னிப்பும் கேட்டுக் கொண்டார்.

அவருக்குப் பரிசாகக் கொடுக்க நான் எடுத்துக் கொண்டு போன 'அல்லா' சி.டி.யைக் கொடுத்தேன். பத்து நிமிஷம் ஓடிய அந்தப் பாடலை மிகவும் ரசித்துக் கேட்டார்.

'ஒரு சமயம், பாரதியார் திருவல்லிக் கேணியில் உள்ள மசூதியைக் கடந்து சென்றபோது, தொழுகை நேர பாங்கொலி கேட்டது. நம்ம பாரதிக்கு தான் எம்மதமும் சம்மதமாச்சே! உடனே 'அல்லா... அல்லா பல்லாயிரம்... பல்லாயிரம்' என்ற கவிதையை உரக்கப் பாடிக்கொண்டே நடந்தார். அதிலிருந்து அந்த மசூதியைக் கடக்க நேரும் போதெல்லாம், 'அல்லா!'வைப் பாடித் தொழாமல் பாரதி இருந்ததே இல்லை' என்று அந்தச் சம்பவத்தை விவரித்தேன்.

கடலுக்கே உப்பு விற்ற கதைதான். கலாம்ஜிக்குத் தெரியாத பாரதியா? ஆனாலும் புன்னகையுடன் கேட்டு ரசித்தார்.

ஒரு மணி நேரம் போனதே தெரியலை. மிகுந்த அன்புடன் வழியனுப்பி வைத்தார். 'ஜனாதிபதியுடன் இன்டர்வ்யூ' என்று முடிவானதும், ஒரு வித பயம் கலந்த மிடுக்கான அனுபவத்தை எதிர்பார்த்து தான் குடியரசுத் தலைவரது மாளிகைக்குள் போனேன். ஆனால் நான் அங்கே சந்தித்ததோ, ஓர் எளிமையான மகானை. அனுபவித்ததோ ஆன்மிக ஸ்தலங்களில் உணரப்படும் அதே தெய்வீக உணர்வை!"

**- ஜெயஸ்ரீ**

‘புள்ளிராஜாவுக்கு எய்ட்ஸ் வருமா?’, ‘அர்ஜுன் அம்மா யாரு?’, ‘நூறடி ரோட்டுல கவனிச்சீங்களா?’ போன்ற கேள்விகளை எழுப்பி சில வாரங்கள் மண்டை காய வைத்து, பிறகு பதிலைச் சொல்லிக் கவர்வது இன்றைய விளம்பர யுக்தி. சில கம்பெனிக்காரர்களுக்கு உதவும் வகையில் இதோ டிப்ஸ்!



**செல் ஃபோன் கம்பெனிக்கு**

‘வள்ளிராஜாவுக்கு ரீச் ஆகுமா?’



**சீரியல் கம்பெனிக்கு**

‘ராமாயி அழுவாளா?’



**ஹேர் ஆயில் கம்பெனிக்கு**

‘அர்ஜுன் அப்பா ‘டை’ அடிப்பாரா?’

**ஃபைனான்ஸ் கம்பெனிக்கு**

‘காத்தமுத்து ஓடுவானா?’




**வாசனை சோப் கம்பெனிக்கு**

‘கபாலி மேல ‘கப்பு’. கவனிச்சீங்களா?’

**துணி சோப்பு கம்பெனிக்கு**

*'கணவரைத் துவைச்சீங்களா?'*





**புடைவைக் கடைக்கு**

*'வாரக் கணக்கா மனைவியைக் காணலியா?'*



**செருப்பு கம்பெனிக்கு**

*'தங்கச்சி காலைக் கடிக்குமா?'*



**மசால் தூள் கம்பெனிக்கு**

*'உங்க நாக்கு உயிரோட இருக்கா?'*

# ராமாயி அழுவாளா?

–வீ.விஷ்ணுகுமார்

**ஹெல்த் டிரிங்க் கம்பெனிக்கு**

*'தண்ணீர் லாரியை மகன் விரட்டிப் பிடிப்பானா?'*



# 18. உனக்கு இரங்காவிடில்...

சதித்திட்டங்கள் வகுப்பதிலும், வெகு திறமையுடன் சமயம் பார்த்து அவற்றை நிறைவேற்றுவதிலும் மகா நிபுணனென்று பெயர் எடுத்திருந்த ராகுலன், மேலமங்கலக் கோட்டையைத் தாக்க வகுத்திருந்த திட்டமும் சமயமும் மிகச் சரியானது தான். ஆனால் அதை நிறைவேற்றும் போது அங்கு ஏற்பட்ட மாற்றங்கள் அவனைத் திணறடிக்கவே செய்து, சுத்த வீரத்துக்கும் நேரிடையான போருக்குமே என்றும் பிரதான மதிப்பளிக்கும் தமிழர்கள், சதிகளையும் எப்படி எதிர் கொள்வார்கள் என்பதைப் புரிய வைத்தன.

ராகுலனும், கொங்கு நாட்டுக் காங்கேயனும் வீரர்களுடன் அதிவேகமாக நெருங்குவதைக் கண்ட பாண்டிய வீரர்கள், மீண்டும் கோட்டையை நோக்கி சாவதானமாக வண்டிகளை நடத்த ஆரம்பித்தார்கள். வண்டிகளை நெருங்கிச் சூழ்ந்து கொள்ள ராகுலனின் வீரர்கள் சற்றுத் தொலைவிருக்கையில், கோட்டைச் சுவரின் மீது திடீரெனப் பந்தங்கள் பல எரிந்தன. திறந்து கிடந்த வடக்கு வாயிலின் வழியே வரிசையாக வெளி வந்த பாண்டிய வீரர்கள் இரு பிரிவுகளாகப் பிரிந்து, கரங்களில் விற்களுடனும், ஈட்டிகளுடனும் அணிவகுத்தனர். அடுத்து அசுர வேகத்தில் பாய்ந்து வந்த புரவிகளில் வந்த வீரர்கள், ஆயுத வண்டிகளைச் செலுத்தியவர்களுக்கு பாதுகாவலாகச் சூழ்ந்து கோட்டையை நோக்கித் திரும்பச் செலுத்தினார்கள். அதே சமயத்தில் ராகுலனின் பின் புறத்தில், ஆற்றின் சரிவுகளிலிருந்து பந்தங்களுடன் வீரர்களின் அணிவகுப்பு ஒன்றும் தோன்றி நீண்ட சுவர் போல நின்றது.

கோட்டையின் எதிரேயிருந்த மணல் வெளியில் ராகுலனும் அவன் வீரர்களும் புரவிகளை நிறுத்தி கோட்டையை வெறித்தனர். இரண்டாவது கணத்தில் ராகுலன் நின்றிருந்த தரை தட்தட்டென்று அதிரத் தொடங்கியது. கோட்டையின் இடப்புறத்தில் இரண்டு கோல் உயரத்தில் வரிசையாகப் பந்தங்கள் தெரிந்து நகர்ந்தன. சற்று நெருங்கியதும் அவை பாண்டியரின் போர்க்களிறுகளின் ஒரு பிரிவு என்பது புலப்பட்டது ராகுலனுக்கு. களிறுகளின் முகப்பில் பூரண கவசங்களுடன், பெரும் ஈட்டிகள் பக்கங்களில் ஊசலாட, பல களங்களைக் கண்டும் தாகம் தீராத தன் நீண்ட வாளுடன் வந்து கொண்டிருந்தான் ரணதீரப் பாண்டியன்.

தன்னைத் தொடர்ந்து வந்து, தானும் காங்கேயனும் வகுத்த திட்டத்தையும் அறிந்து, யாரோ தகுந்த முன்னேற்பாடுகள் செய்து கொள்ள உதவியிருக்க வேண்டும் என்பது புரிந்தது ராகுலனுக்கு.

ராகுலன் நின்ற இடத்தின் வலது புறத்தில் கோட்டையின் பக்கங்களிலிருந்து புரவிப்படைப் பிரிவு ஒன்றும் பாய்ந்து வரத் தொடங்கியது. முன்னால் வந்த பாண்டிய மன்னனின் சாம்பல் நிறப் புரவியும், அதன் மீது அமர்ந்து, ரிஷப இலச்சினையுடன் கூடிய வாளை உயர்த்தியபடி வந்த அந்த சோழ நாட்டு வாலிபனையும் கண்ட ராகுலனுக்கு, தன்னைத் தொடர்ந்து வந்து திட்டங்களை அறிந்தவன் யாராக இருக்கக் கூடும் என்ற கேள்விக்கு விடையும் கிடைத்தது. உறையூரில் கண்ட அந்த வாளின் வீச்சும் நினைவில் எழுந்தது.

நான்கு புறமும் சூழப்பட்டு

## மகுட வைரம்

விஷ்வக்ஸேனன்



விட்ட ராகுலனை அதற்குமேல் சிந்திக்க விடவில்லை ரணதீரன். அவன் கரத்திலிருந்த பெரும் ஈட்டி உயர்ந்து இரு முறை ஆடியது. அடுத்த கணம் எழுந்தது பெருங்கூச்சல். போர்க் களிறுகள் பயங்கரமாகப் பிளிறின. நிலம் அதிர தட்தட்டென்று வேக நடையில் ராகுலனின் படைப்பிரிவை நோக்கி ஓடின. ஜிவ்ஜிவ்வென்று பறந்த

ஈட்டிகள் காங்கேயனின் படைப்பிரிவில் அதிவேகத்துடன் இறங்கின. பராந்தகனின் புரவிப்படைப் பிரிவு நாலுகால் பாய்ச்சலில் நெருங்கின. பருத்த உருவமும் கனத்த பட்டையான வாளுமாக, பகதத்தன் ஏதோ கோபம் கொண்ட பிரும்ம ராட்சதன் போல் ராகுலன் இருந்த இடத்தை நோக்கி, சரமாரியாக ராஷ்டிர கூடர்களை வெட்டித் தள்ளியபடி முன்னேறினான். முன்னும் பின்னுமிருந்து அம்புகள் பறந்தன. எல்லாக் கொள்ளைகளுக்கும் தன்னுடன் துணை வந்த ராஷ்டிரகூடர்கள் கண்ணெதிரே மடிவதையும், துணைக்கு வந்த காங்கேயனின் வீரர்கள் துவம்சம் செய்யப் படுவதையும் கண்ட ராகுலனின் ஆத்திரம் தலைக்கேறியது. இனி தானும் தன்னுடன் வந்தவர்களும் முற்றிலுமாக அழிக்கப்படுவதும், தப்பிச் செல்ல வழியேதுமில்லையென்பதும் புரிந்தது ராகுலனுக்கு. பின்வாங்கியபடியே நகர்ந்தவன் கண்ணில் ஆற்றின் கரையிலிருந்த வீரர்களுக்கும், போர்க் களிறுகளுக்குமிடையே தெரிந்த இடைவெளி புலப்பட்டது. மற்றவர்கள் போரிட்டுக் கொண்டிருக்க, மிஞ்சிய ஏழெட்டு வீரர்களுடன் அந்த இடைவெளியை நோக்கிப் புரவியைப் பாயவிட்டான் ராகுலன். கழுத்தை உரசிச் சென்ற ஈட்டிகளிலிருந்தும், அம்புகளிலிருந்தும் காயங்களுடன் தப்பியவன், தோகைமரக் கூட்டங்களிடையே பாய்ந்து மறைந்தான்.

அடுத்த ஒரு ஜாமத்தில் அந்தப் போர் முடிந்தபோது ராகுலனுடன் தப்பியவர்களைத் தவிர, ராஷ்டிர கூடர் அனைவரும் காங்கேயனின் வீரர்களுடன் மடிந்திருந்தனர். மார்பில் ரண தீரனின் பெரும் ஈட்டி குத்திட்டு நிற்க, காங்கேயனின் உயிரற்ற விழிகள் வானத்தை வெறித்துக் கிடந்தன.

இறந்தவர்களுக்கு ஆற்றின் கரையிலேயே கிரியைகள் செய்துவிட உத்தரவிட்ட ரணதீரன், பராந்தகனும் பகதத்தனும் உடன் வர, உத்தம பாளையக் கோட்டைக்குத் திரும்பினான்.

**ம**றுநாள் காலைப் பொழுதிலேயே தன்முன் பயணக் கோலத்தில் வந்து நின்ற பராந்தகனையும், பகதத்தனையும் கண்ட ரணதீரனின் முகத்தில் வியப்பு பரவியது.

"பராந்தகரே, உங்கள் காயங்களுக்கு இன்னும் சரிவர மருந்திடவும் இல்லை. அதற்குள் எங்கு பயணப்பட்டு விட்டீர்கள்?" என்றான் வியப்புடன்.

"தலைவரே, ராகுலன் தப்பிவிட்டான். அடுத்து அவனுக்கு புகலிடமாகவும், உதவி பெறவும் உள்ள இடம், மலை நாட்டின் வில்லவனின் பகுதிதான். ராகுலனை மீண்டும் ராஷ்டிரகூடம் திரும்ப விடுவதில்லை என்று மன்னரிடம் உறுதி கூறி விட்டே நான் புறப்பட்டேன். விடை கொடுங்கள்" என்றான் பராந்தகன்.

ரணதீரன் சற்று சிந்தித்தான். "பராந்தகரே, தென் எல்லையின் காவல் நம் மலைப்பகுதி கூபகர்களிடம் இருக்கிறது. அவர்கள் வில்லவனின் இனத்தவருக்கு ஜென்மப் பகைவர்கள். நீங்கள் அவர்களின் உதவியைப் பெறுவது வில்லவனையும், ராகுலனையும் அழிக்கத் துணை செய்யும்."

அதற்குமேல் தாமதிக்க விரும்பாத பராந்தகன், பகதத்தனுடன் அப்போதே கூபகர்களைச் சந்திக்க, மலை வழியில் பயணப் பட்டான்.

**த**மிழகத்தின் ஒப்பற்ற நகரங்களில் ஒன்றான காஞ்சியில் ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்தையும், தமிழரிடம் காட்டிய அலட்சியத்தையும் கண்டு சலித்தபடியே வானில் ஏறிய நிலவு, மகாராணி ரேவா தேவியின் மாளிகைச் சாளரத்தின் வழியே, மகாராணியுடன் ராஜமாதுலரும் நிற்பதைக் கண்டு மேகத்திரையை இழுத்து மூடிக் கொண்டது.

"சகோதரி, மன்னர் வந்தபின் குணவர்மரையோ, என்னையோ இதுவரை விசாரிக்கவில்லையே'' என்றார் ராஜ மாதுலர்.

மகாராணியின் பதில் குழப்பத்துடன் வந்தது. "குணவர்மரை மன்னர் பூரணமாக நம்புகிறார். காஞ்சியில் வாணிபத்தைத் தொடர இனி மனமில்லையென்று கூறிவிட்டு, குணவர்மர் சென்றுவிட்டார். எங்கு சென்றார் என்பதும் தெரிய

''ஸ்டோரி டிஸ்கஷன் இருக்கு... காலைலே ஆறு மணிக்கு சொக்கம்பட்டி அரசமரத்தடி மேடைக்கு வந்துடுங்க!''

''சே! வில்லேஜ் சப்ஜெக்ட்னா டிஸ்கஷனைக் கூட கிராமத்திலதான் வச்சுத் தொலைக்கணுமா என்ன?''

- உ. ராஜாஜி



வில்லை. உன்னையும் பிறகு விசாரிப்ப தாகக் கூறினார்."

"பாண்டிய இளவரசியைக் கவர்ந்தது பற்றி...?"

"கடுமையாகக் கடிந்து கொண்டார். எல்லைப்புறத்துச் சத்திரத்தில் அவர்களைக் காத்து அனுப்பிவைத்ததாகவும் தெரிவித்தார். பிறகு எதுவும் கூறவில்லை, விசாரிக்கவுமில்லை."

"நம்மிடம் மன்னருக்கு அச்சம் என்று நினைக்கிறேன்" என்றார் ராஜமாதுலர் கோணல் நகைப்புடன்.

"முட்டாளே, அவர் ரத்தத்தில் அச்சம் என்பது கிடையாது. கயிற்றைத் தளர விடுபவன் அடுத்து இன்னும் மேலே உயரப்பிடிப்பான். உன்னை விட்டு வைத்திருப்பது ஏனென்று புரியவில்லை. சரி, ராகுலன் என்னவானான்?"

"வெள்ளலூரில் இந்தளதேவனைத் தீர்த்துவிட்டான். ஆனால் அன்றே பாண்டியன் அங்கு வந்திருக்கிறான். காங்கேயனுடன் மேலமங்கலத்தாக்குதலை நடத்தச் சென்றபோது..."

"சொல் மேலே."

"நம் திட்டங்களை முழுவதுமாக பாண்டியர் அறிந்திருக்கிறார்கள். ராகுலனுடன் சென்றவர்கள் மொத்தமாக ரணதீரனால் அழிக்கப்பட்டு விட்டார்கள். ராகுலன் தப்பித்து வில்லவனை அடைந் திருக்கிறான்."

மகாராணியின் முகம் சிவந்து விழிகள் அனலைக்கக்கின.

"இது எப்படி சாத்தியம்? ஓலையை உன்னிடம்தான் கொடுத்தேன். அவர்களுக்கு எப்படித் தெரிந்தது?"

"தெரியவில்லை சகோதரி. வில்லவனிடமிருந்து செய்தி வந்தபின்புதான் நானே அறிந்தேன். இறுதியாக எடுத்த முத்துக்களைக் கொண்டு செல்லப் போவதாகவும், சிரமமாக இருப்பதாகவும் தெரிவித்திருக்கிறான்."

மகாராணியின் விழிகள் மின்னின. "ராஜமாதுலா, அந்த முத்துக்கள் நம்மை அடைய வேண்டும். ராகுலனுடன் சேர்ந்து அதைக் கொண்டு வந்து விடு. நீ இன்றே புறப்பட்டு கொற்கைக்குச் செல்" உத்தரவிட்டாள் மகாராணி.

ராஜமாதுலர் தமக்குள் "இந்தக் கொள்ளையுடன் நான் இங்கு திரும்பப் போவதில்லை சகோதரி. ராஷ்டிர கூடத்திற்கே போய் விடுகிறேன். இதுதான் கடைசிக் கொள்ளை" என்றபடியே புறப்பட்டார்.

செம்பஞ்சு பூசப்பட்ட பதுமைகள் போல் நின்றிருந்த யவனக் காவல் மங்கையர், ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர்.

'படைத்திறல் பல்லவர்கோன் பணிந்த பரமேச்சுவர விண்ணகரத்தின்' ஆலயப் பிராகாரங்களும், மேற்கூரையும் வண்ணச் சித்திரங்களால் மின்னிக் கொண்டிருந்தன. ஓயாது சித்திரங்களைத் தீட்டிக் கொண்டிருந்த கலைஞர்களுக்கு, தானே வண்ணங்களைக் குழைத்துத் தருவதும், தூரிகைகளைக் கூர் தீட்டித் தருவதுமாக நின்றிருந்தான் பல்லவ நந்திவர்மன். இரவு நன்றாக ஏறியும் அரண்மனைக்குத் திரும்ப மனமில்லை மன்னனுக்கு.

வெகு நேரமாக மேலே பார்த்தபடியிருந்தவன், சற்றுக் குனிந்து தலையை அப்படியும் இப்படியுமாகத் திருப்பிக் கொண்டான். அவன் பார்வையில் வாயிலினருகே காவலரால் நிறுத்தப்பட்டிருந்த யவனமங்கை தென்பட்டாள்.

கரங்களிலிருந்த வண்ணக் கலவைகளை அருகிலிருந்த பணியாளன் ஒருவனிடம் அளித்தவன், வாயிலை நோக்கி நடந்தபடியே யவனமங்கையை அருகில் வருமாறு அழைத்தான்.

மன்னனை நெருங்கி வணங்கிய யவன மங்கை, "மன்னவா, இன்று ராஜமாதுலர் மகாராணியின் மாளிகைக்கு வந்திருந்தார்."

"சொல் மேலே."

"ராகுலனின் திட்டம் வெள்ளலூரைத் தவிர வேறு எங்கும் நிறைவேறவில்லையென்றும், உடன் சென்றவர்கள் அழிக்கப்பட்டதாகவும் கூறினார்."

மன்னன் முகத்தில் முறுவல் அரும்பியது. "ராகுலன் என்னவானான்?" என்றான்.

"ராகுலன் தப்பி வில்லவனை அடைந்திருக்கிறான். கொற்கை முத்துக்களை மீண்டும் கவர்ந்து, ராகுலனுடன் திரும்பி வர ராஜமாதுலர் இன்றே புறப்படுகிறார்."

"சரி, இனி நான் கவனித்துக் கொள்கிறேன். நீ உன் பணியைத் தொடர்ந்து செய்."

"மன்னவா" - அந்த யவனமங்கை தன் இடையிலிருந்து ஓலைக்குழலொன்றை எடுத்து நீட்டினாள். "இது சற்று முன்புதான் ராஷ்டிரகூடத்திலிருந்து வந்தது. நீங்கள் எதிர் பார்த்த வேளை நெருங்கிவிட்டதென்று எண்ணுகிறேன் மன்னா" என்றாள் மலர்ந்த விழிகளுடன்.

ஓலைக் குழலைப் பெற்றுக் கொண்ட மன்னனின் விழிகள் இன்னும் ஒளி வீசின. "பெண்ணே, உனக்குத் தகுந்த பரிசை பிறகு அளிக்கிறேன். இன்னும் ஓர் ஓலையும் மகாராணிக்கு வரும். எந்த வேளையாயிருந்தாலும் உடனே எனக்குத் தெரிவி. நீ போகலாம்" என்ற நந்திவர்மனின் முகம் மலர்ந்துகிடந்தது.

கரங்களில் ஓலைக் குழலுடன் சற்று நேரம் அங்கேயே நின்ற நந்திவர்மனின் மந்தகாச முகத்தில் சிந்தனையும் கலந்து தெரிந்தது. பின்பு அருகிலிருந்த பந்தத்தின் ஒளியில் குழலைப் பிரித்து, ஓலையைப் படிக்கத் தொடங்கியவனின் முறுவல் இன்னும் விரிந்தது. முகத்தில் பெரும் திருப்தியும் படர்ந்தது.

அவன் பெருவிழிகள் உயர்ந்து முகுந்த விமானத்தை ஏறிட்டன.

"வைகுந்தா, உன் திருவுள்ளம் இப்போதுதான் இரங்கியதா?" என்று சற்று உரக்கவே கேட்கவும் செய்தான் நந்திவர்மன்.

முகுந்த விமானமோ, அந்த வைகுந்தனோ, நந்திவர்மனின் ஏக்கம் நிறைந்த அந்தக் கேள்விக்கு உடனடியாக பதிலேதும் தரவில்லை.

ஆனால் நந்திவர்மனுக்குப் பின்னாலிருந்து பதில் வந்தது.

"நந்திவர்மா, உனக்கு இரங்காவிட்டால், அந்த வைகுந்தன் வேறு யாருக்கு இரங்கக் கூடும்?" என்று.

சட்டென்று திரும்பிய நந்திவர்மனின் எதிரே நல்ல உயரத்துடனும், திடமான உடலமைப்புடனும் ராஜரீக உடை அணிந்து கம்பீரமாக நின்றார் ஒருவர். முதுமையின் ரேகைகள் படிந்த அவர் முகத்தில் பயணக் களைப்புடன் நந்திவர்மன் மீது கொண்டிருந்த அன்பும், அபிமானமும் தெளிவாகத் தெரிந்தன.

அடுத்து அந்த மனிதரிடமிருந்து உதிர்ந்த வார்த்தைகள், நந்திவர்மன் முகத்தில் ஆறுதலையும், பெரும் நம்பிக்கையையும் படரவிட்டன.

காஞ்சி மண்டலம் மட்டுமல்லாது, தமிழகமே இனி ராஷ்டிரகூடரிடமிருந்து விடுபட்டுவிடும் என்பதும், அதற்கான திட்டத்தைதான் நிறைவேற்றும் காலம் நெருங்கிவிட்டதென்பதும், தமிழகத்தின் மன்னர்களுள் தானும் ஒருவனாக மக்கள் ஏற்கும் நாள் அதிக தூரத்தில் இல்லை என்பதும் புரிந்தது நந்திவர்மனுக்கு.

(தொடரும்)



"நேத்து தாதா தாமு சொன்ன பதிலைக் கேட்டு ஜட்ஜ் அசந்துட்டாரு..."

"அப்படி என்ன சொன்னான்?"

"ஏண்டா நாலு மனைவியரில் மூணு பேரை குளோஸ் பண்ணினேன்னு கேட்டதுக்கு ஒருத்தனுக்கு ஒருத்திங்கறதுதானே தமிழ்ப்பண்பாடுன்னு பௌன்ஸர் அடிச்சான்!"

- உ. ராஜாஜி



# ஜோஸ்னாவின் ஜோசியம்!

நான்கு வருடங்களுக்கொரு முறை இந்தியாவின் மானம் ஒலிம்பிக்ஸில் கப்பலேறுவதைப் பார்த்து நொந்து போயோ என்னவோ, "2012 ஒலிம்பிக்ஸில் தங்கம் வெல்வேன்" என்று கையில் அடித்து சத்தியமே செய்கிறார் சென்னைப் பெண்ணான ஜோஸ்னா சின்னப்பா. ஏன் 2012? அந்த வருடத்தில் நடக்கும் ஒலிம்பிக்ஸில் தான் ஸ்குவாஷ் ஒரு விளையாட்டாக சேர்க்கப் பட்டுள்ளது.

சமீபத்தில் பாகிஸ்தானில் நடந்த எஸ்.ஏ. எஃப் கேம்ஸில் தங்கம், 2003ல் பிரிட்டிஷ் ஓபன் பட்டம், 2000ம் வருடத்தின்போது பதினாறு வயதிலேயே நேஷனல் சீனியர் சாம்பியன் என 'ஜம்' என்று இந்த பதினெட்டு வயதில், அடுத்தடுத்த கட்டங்களுக்குச் செல்ல, தன்னை பலமாகத் தயார்ப்படுத்தி வருகிறார் ஜோஸ்னா.

"ஸ்குவாஷ் என்றாலே ஏதோ காஸ்ட்லியான விளையாட்டுன்னு எல்லோரும் ஒதுங்குறாங்க. இதற்கு ஒரு ராக்கெட் (மட்டை), ஒரு பந்து போதும். ஆனா பேட்மிட்டன் விளையாடற என் தம்பிக்கு, அப்பா ஆயிரக் கணக்குல செலவு செய்யறாரு. ஸ்குவாஷ் பற்றி யாருமே சரிவரப் புரிஞ்சுக்குறதில்லை. ஆண்கள் பிரிவுல பாகிஸ்தான் உலக சாம்பியனா இருக்கிறதுக்குக் காரணமே, அடித்தட்டு மக்கள் இந்த விளையாட்டை சகஜமா ஆடறதுதான்" என்பவர் போட்டிகளுக்காக ஒரு வருடத்துக்கு குறைந்தது ஐந்து முறை ஃபாரின் ட்ரிப் அடித்தாலும், தனியாகவே சென்று வருகிறாராம்.

பிரிட்டிஷ் ஓபன் பற்றிக் கேட்டால் முகம் சட்டென்று சுருங்குகிறது. "நான் பைனல்ஸ்ல ஜெயிச்சும் இந்தியர்கிறதால யாருமே கைதட்டி பாராட்டலை" என்று வருத்தப்படுகிறார்.

"சர்வதேசப் போட்டிகளுக்காக என்னை தயார்ப்படுத்திக் கொள்வது சிரமமாக இருக்கிறது. என்னோடு போட்டி போடும் அளவிற்கு இங்கு பெண்கள் கிடையாது என்பதால், ஆண்களோடு ப்ராக்டிஸ் செய்கிறேன். அதேபோல தமிழ்நாடு விளையாட்டுக் கழகமும் டி.என்.பி.எல்லும் ஸ்பான்சர் செய்தாலும், வெளிநாட்டுப் பயணங்களுக்கு அது போதவில்லை.

பாகிஸ்தான் வீரர்கள் எந்தவொரு பாகுபாடுமில்லாமல் பழகுகிறார்கள். நான் ஹிந்தியில் அவர்களோடு பேசியதால் சகஜமாகி, பாலிவுட் ஹீரோயின்கள் பற்றி ஆர்வமுடன் கேள்விகள் கேட்டுத் துளைத்து விட்டார்கள். ஹிந்தி சினிமா மீது அவர்களுக்கு அத்தனை ஆர்வம்" என்று குதூகலிக்கும் ஜோஸ்னா, டிசம்பரில் சென்னையில் நடக்கவிருக்கும் டபுள்ஸ் உலகக் கோப்பைக்காகத் தயாராகி வருகிறார்.

- கன்

# திடீர் பரிசுப் போட்டி - 5 முடிவு

**'புதுமணத் தம்பதி தனுஷ் - ஐஸ்வர்யாவை சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்த் என்ன சொல்லி வாழ்த்தியிருப்பார்?' என கற்பனை பஞ்ச் டயலாக் எழுதச் சொல்லிக் கேட்டிருந்தோம். வாசகர்கள் புகுந்து விளையாடி விட்டார்கள். பல பேருக்கு ஒரே ஐடியா வந்திருந்ததும் தமாஷான ஜாலிதான்!**

## பிரசுரத்துக்குத் தேர்வானவை

பாபா கவுண்டிங் ஸ்டார்ட்ஸ்! 1,2,3...10. மாப்ளே தனுஷ்! கட்டு தாலியை!

- கே.எஸ்.குமார பாளையம்

''ஜக்குபாயை நினைச்சேன்...
சந்திரமுகி கிடைச்சது...!
பில்லா மாப்ள தேடினேன்...
சுள்ளான் கிடைச்சாரு...!
நினைச்சது கிடைக்காட்டி
கிடைச்சதை விரும்புங்க...!''

- பாலா, நாமக்கல்

உங்கள் வழி நடத்துனரான இந்த கண்டக்டர், ராங்குக்கு ஒருபோதும் ரைட் குடுத்ததில்லை... ரைட் குடுத்த எதுவும் ராங் ஆனதுமில்லை... உங்க வாழ்க்கைப் பயணத்துக்கு என் டபுள் ரைட்...!

- எம்.ஆர்.மூர்த்தி, மும்பை

மன்மத ராசா, மன்மத ராசா,
நீ மணக்கப் போறது
நான் பெத்த ரோசா...
உன்னை நூறு வருஷம் வாழ
வாழ்த்தறது ராஜாதி ராஜா...

- பா. ஜெகன், வேலூர்

நானும், என் பஞ்ச் டயலாக்கும் போல மணமக்கள் இணைந்து வாழ்க!

- இரா. கணேசன், சேலம்

''தனுஷ்! தள்ளிப் போனது ஜக்குபாய்!
கிட்ட வந்த நீ லக்கிபாய்!''

''ஆறுகளை இணைக்கத் தருவேன் கோடி!
ஐஸ்வர்யாவுக்கு தனுஷே ஜோடி!''

- தா.மு.இக்பால், தஞ்சாவூர்



**''உங்க வாழ்க்கை பாபா மாதிரி டல்லா போகாம, பாட்ஷா மாதிரி நல்லா போகணும்.''**

**- லட்சுமி ஆவுடைநாயகம்**



கண்ணா, நீ 'ஒல்லி'யா இருந் தாலும் உன் புகழ் 'டெல்லி' வரைக்கும் ஒலிக்கட்டும்!

- 'காசி' சக்திவேலன், குமாரபாளையம்



''அன்பா இருங்க...! அம்பா இருக் காதீங்க! விட்டுப் பிடிங்க...! விட்டுட்டு பிடிக்காதீங்க! எடுத்துக்காட்டா இருங்க...! எடுத்தெறியாதீங்க! உள்ளதைக் கொடுங்க...! உள்ளத்தோடு கொடுங்க!

-மதுரை முருகேசன், திருச்சி

நூறு வருஷம் இந்த மாப்பிள்ளையும் பொண்ணும் தான் பேரு விளங்க இங்கு வாழணும்!

- கௌசல்யா ஸ்ரீராமன், ஹைதராபாத்

''கண்ணுங்களா... வாழ்க்கைன்னா அதிலே பாட்ஷாவும் இருக்கும், பாபாவும் இருக்கும். ரொம்ப ஆடவும் கூடாது, ஒடுங்கி உக்காந்துடவும் கூடாது.''

- வி.என். கோபால், சென்னை-91

**தா**ன் வேலைக்குச் சேர்ந்து இரண்டு வருடமாகியும் பதவி உயர்வு, ஊதிய உயர்வு, எதுவும் கிடைக்காததால், இன்னிக்கு மானேஜரிடம் பேசியே தீருவது என 'பேக்கு மாணிக்கம்', மானேஜரின் அறைக்குள் நுழைந்து, தன் மன வருத்தத்தை தைரியமாகச் சொன்னான்.

''என்னது, ஊதிய உயர்வா... நீ ஒரு நாள் கூட வேலை செய்யல்லே. அதுக்கு இத்தனை எதிர் பார்ப்பா? சரி. சரி... நா கேக்கற கேள்விக்கெல்லாம் பதில் சொல்லிட்டு வா. ஓ.கே...?''



**மானேஜர்** : ஒரு வருடத்துக்கு எத்தனை நாட்கள்?

**பேக்கு** : 365 நாட்கள்... சில சமயம் 366 சார்.

**மா** : ஒரு நாள் என்றால் எத்தனை மணி நேரம்?

**பே** : 24 மணி நேரம்.

**மா** : ஒரு நாளில் இங்கு வேலை செய்யும் நேரம்?

**பே** : எட்டிலிருந்து நாலு வரை. அதாவது எட்டு மணி நேரம்.

**மா** : சரி. இதில் உருப்படியாக வேலை செய்யும் கணக்கீடு? தட் மீன்ஸ்... ஃப்ராக்ஷன்?

**பே** : (மனக்கணக்கு

## ஸ்ரீசாயி அனுபவம்!

### பிரார்த்தனை பலித்தது!

**நா**ன் சிறு வயதிலிருந்து பாபா பக்தை. என்னுடைய பேச்சு தெளிவாக இருக்காது. ஆனால் சாயிபஜன்ஸ் பாடும்போது, அந்தக் குறையே தெரியாது. நான் பி.எஸ்.ஸி. முடித்துவிட்டு, பிரின்ஸ் வெங்கடேஸ்வராவில் எம்.எஸ்.ஸி. ஐ.டி படிக்க விண்ணப்பித்திருந்தேன். ஆனால் சீட்டு இல்லை என்று சொல்லிவிட்டார்கள். அன்று முழுக்க பாபாவை தியானம் செய்து கொண்டிருந்தேன். தீவிரமான ஜபம். மறுநாள் காலை, கல்லூரியிலிருந்து வந்த பணியாளர் ஒருவர், ''யாரோ விலகிக் கொண்டதால், ஒரே ஒரு சீட்டு உள்ளது. உடனே சேரவும்'' என்று சொல்லிச் சென்றார். என் பிரார்த்தனை பலித்தது. சந்திரனைக் காண தொலைநோக்கி தேவையா? நீங்கள் கேட்டதால்தான் இந்த அனுபவத்தைச் சொல்கிறேன்.



• விஜயலக்ஷ்மி



# கார்க்கோடக மானேஜரும் பேக்கு மாணிக்கமும்!

போட்டபடி) 8/24... என்றால் ஒன் தேர்ட்... மூன்றில் ஒரு பங்கு

மா : வெரிகுட்... 366ன் ஒன் தேர்ட் எவ்வளவு?

பே : 122 சார்

மா : நீ வாரக்கடைசியில் வேலை செய்கிறாயா?

பே : இல்லை சார்.

மா : ஒரு வருடத்தில் எவ்வளவு சனி, ஞாயிறு?

பே : 52 சனி, 52 ஞாயிறு.. மொத்தம் 104.

மா : தாங்க்ஸ். அந்த 122 நாட்களி லிருந்து 104 நாட்கள் கழித்தால் எவ்வளவு மிச்சம்?

பே : 18 நாட்கள் சார்.

மா : ஒவ்வொரு வருடத்துக்கும் இரண்டுவார சிக் லீவ் உண்டே... இப்போது அந்த பதினான்கு நாட்களை மிச்சமிருக்கும் பதினெட்டு நாட்களி லிருந்து கழித்தால் மிஞ்சுவது?

பே : 4 நாட்கள்.

மா : புது வருடத்தன்று வேலை?

பே : நோ சார்....

மா : தொழிலாளர்கள், ஊழியர்கள் தினத்தன்று வேலை செய்தாயா?

பே : இல்லை சார்.

மா : சரி, இப்ப எத்தனை நாட்கள் கையில்?

பே : 2 நாட்கள்!

மா : நேஷனல் ஹாலிடே மற்றும் கிறிஸ்துமஸ் அன்று வேலை செய்தாயா?

பே : இல்லை சார்.

மா : இப்பச் சொல்லு? எவ்வளவு நாட்கள் வேலை செய்திருக்கிறாய்?

பே : ஒன்றுமேயில்லை.

மா : பின்னே எதை வைத்துக் கொண்டு ஊதிய உயர்வு, பதவி உயர்வு தைரியமா கேக்கற? ஒரு நாள்கூட ஒழுங்கா வேலை செய்யல்லே.

பே : புரிஞ்சுடுச்சு சார்... நீங்க தெய்வம்... ஒரு வேலையும் பண்ணாத (!) எனக்கு இரண்டு வருஷமா சம்பளம் கொடுத்திண்டிருக்கீங்க. நான் கம்பெனிக்கு மோசம் பண்ண நெனச்சேனே... துரோகி நான்.. விளங்கவே மாட்டேன்... இனிமே பரலோகம் போகிற வரை பதவி, ஊதிய உயர்வு வேண்டவே வேண்டாம் சார்..."

**- லதா சேகர்**

# பாலிடிக்ஸ் பஜார்

பாராட்டு மழை பொழிந்த நட்சத்திரங்களை 'காக்காய்க் கூட்டமென' தலைவரே வர்ணித்து தொண்டர்களையும், ஆதரவு பத்திரிகைகளையும் ரொம்பவும் தைரியப்படுத்திவிட்டதுபோல! மீண்டும் நட்சத்திரங்களை 'காக்காய்கள்' என நக்கலாக அவை வர்ணிக்கின்றனவாம். இது, சம்பந்தப்பட்ட நட்சத்திரங்களை வருத்தமடையச் செய்துவிட்டதாம். உடனடியாக இன்டல் மழை குறித்து கூடிப்பேசி ஒரு அதிரடி முடிவை எடுக்க வேண்டுமென வற்புறுத்தி வருகிறார்களாம். இதற்கு அம்மாவின் ஆதரவும் கிட்டும் என்றும் நம்புகின்றனராம் நட்சத்திரங்கள்.

வீரப்பன், வீராணம், வீசிடி என ஹாட்ரிக் வெற்றியில் கிடைத்த பலனை, வரும் தேர்தலில் ஏகபோகமாக அனுபவிக்கலாம் என மகிழ்ச்சியில் திளைத்தனராம் ரத்தங்கள். தற்போது 'இந்துக்கள் வோட்டு இழப்பு' என்ற மாபெரும் இடி, அவர்களை அதிகமாக இம்சித்து விட்டதாம். இதைத்தான் 'சாண் ஏறினால் முழம் சறுக்கும்' என்று சொல்கிறார்களோ என்று வேதனை பொங்கப் பேசுகின்றனராம் பாதிக்கப்பட்ட ரத்தங்கள்.

உட்கட்சிக் குழப்பங்களால் விரக்தியடைந்து இருந்த பா.ஜ.கவுக்கு, ஜயேந்திரர் கைது விவகாரம் நேரம் பார்த்து கிடைத்துவிட, இதனை எதிர்த்து நாடு முழுவதும் கண்டனப் பொதுக்கூட்டம், சாலை மறியல், சிறை நிரப்பு போராட்டம், உண்ணாவிரதம் என முழு வீச்சில் களமிறங்கி உள்ளதாம். இதன்மூலம் காங்கிரசுக்கு எதிரான அலையையும் உருவாக்கலாம், தமது தொண்டர்களுக்கும் புத்துணர்ச்சியூட்டலாம் என இரட்டை மாங்காய் அடிக்கப் பார்க்கிறதாம் பா.ஜ.க. இதற்குத் தோள் கொடுக்க ஆர்.எஸ்.எஸ்., சிவசேனா, பஜ்ரங்தள் ஆகியவையும் தயாராம்!





இந்துத்வா பேசுபவர்கள் வரிந்து கட்டிக் கொண்டு போராடக் களமிறங்கியுள்ள பரபரப்பான சூழ்நிலையில், காங்கிரஸ் தரப்பிலிருந்து ஆர்.எஸ்.எஸ். பற்றிய விவகாரமான புத்தகமொன்று வெளியிடப்பட இருக்கிறதாம். இந்து மகா சபையில்





இருந்து பாரதீய ஜனதா கட்சி வரை உள்ள அனைத்து சங்பரிவார்களைப் பற்றியும், அவற்றின் செயல்பாடுகள் குறித்தும் தீவிர ஆராய்ச்சி செய்து, காட்டமாக விமர்சிக்கும் இப்புத்தகம் தற்போதைய அரசியலை மேலும் உஷ்ணமாக்கும் என, பதிலடி தயாரித்து விட்ட தெம்புடன் பேசுகிறார்களாம் காங்கிரஸ் கட்சியினர்.

**கா**ஞ்சி மடம் குறித்த கேள்விகளுக்கு ராமதாஸ் அளித்த பதில்களும், பதிலளித்த தோரணையும் அம்மாவுக்கு அனுசரணையாகவே இருப்பதாகவும், இதில் தங்களுக்கு அவ்வளவாகத் திருப்தி இல்லை என்றும், மாறாக இதில் உள் நோக்கம் இருக்கிறதோ என்ற சந்தேகம் வலுக்கின்றது என்றும் உடன்பிறப்புகள் மத்தியில் பேச்சு கிளம்பியிருக்கிறதாம். ஏறக்குறைய பா.ஜ.க. அதி.மு.க.விடமிருந்து சுத்தமாக விலகிவிட்ட சூழ்நிலையில், அய்யா புது சொந்தத்தை நாடுகிறாரோ என்று பாட்டாளிகளும் பேசி வருகிறார்களாம்.

**எ**ந்த ஆண்டிலும் இல்லாத அளவுக்கு இந்த ஆண்டின் டிசம்பர் ஆறு, அதிகமாகவே அனல் கக்கும் நாளாக இருக்கும் என நம்புகிறதாம் காவல்துறை. அம்பேத்கருக்காக தலித் அமைப்புகளும், வழக்கம் போல் பாபர் மசூதி இடிப்புக்கு எதிராக இஸ்லாமிய அமைப்புகளும், கொண்டாட்டம், ஆர்ப்பாட்டம் என ஏகத்துக்குத் தயாராகி வருகின்றனவாம். எவ்வித அசம்பாவிதமும் அரங்கேறாமல் தடுக்க காவல்துறை கண்ணில் விளக்கெண்ணெய் ஊற்றிக் கொள்ளாத குறையாக இவர்களது நடவடிக்கைகளைக் கண்காணித்து வருகிறதாம்.

**- கலை**

# எங்கே தேடறீங்க?

4
தெம்புக்குப் படிங்க!

தென்கச்சி சுவாமிநாதன்



எழும்பூர் இரயில் நிலையம். திருச்சிக்குப் போகிறவண்டி புறப்படத் தயாராக இருந்தது.

ஒரு பெரியவர் கையில் பெட்டியோடு வந்தார்.

முதல் வகுப்புப் பெட்டியில் ஏறி உட்கார்ந்தார்.

வேறு யாராவது வருவார்களா? என்று வெளியே எட்டிப் பார்த்தார்.

இளைஞன் ஒருவன் கையில் பெட்டியோடு வந்து உட்கார்ந்தான்.



பெரியவருக்கு நிம்மதி.

"நல்லவேளை! நீங்க வந்தீங்க! தனியா போக எனக்குப் பயமா இருந்துது!"

"இதுலே என்ன பயம்?"

"இந்தப் பெட்டிக்குள்ளே பத்தாயிரம் ரூபாய் பணம் வச்சிருக்கேன். பத்திரமா கொண்டு போய்ச் சேர்க்கணுமே. அது தான் பயம்!"

"அப்படியா...? நான் இருக்கேன். தைரியமா வாங்க!"

'எப்படியும் திருச்சி போவதற்குள் அந்தப் பணத்தை எடுத்துக் கொண்டு இறங்கிவிட வேண்டும்!' இளைஞன் திட்டம் போட்டுவிட்டான்.

அதற்கான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

முதலில் நம்மீது ஒரு நல்ல நம்பிக்கையை ஏற்படுத்த வேண்டும்.

"ஐயா... பெரியவரே... இந்தப் பெட்டியைக் கொஞ்சம் பாத்துக்குங்க... 'பாத்ரூம்' போயிட்டு வந்துடறேன்."

இரயில் அரியலூரை நெருங்கியது.

பெரியவர் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். மெல்ல எழுந்து அவர் பெட்டியைத் திறந்து ஆராய்ந்தான்.

உள்ளே பழைய துணிமணிகள்... சில புத்தகங்கள்.. பணமில்லை!

'பெரிசு நம்மளை ஏமாத்தியிருக்கு' என்று முணுமுணுத்துக் கொண்டே வந்து தன் படுக்கையில் விழுந்து தூங்கிப் போனான்.

திருச்சி வந்ததும், "என் பணம் பத்திரமாக வந்து சேர உதவியதற்கு நன்றி!" என்றார் பெரியவர்.

"நான் உதவினேனா? எப்படி?"

"என் பணத்தை உங்க பெட்டியில் வச்சுட்டேன்.. பத்திரமாக வந்தது. காலையில் எடுத்துக்கிட்டேன்!"

இளைஞன் அசடுவழிய யோசித்தான்..

'நம்ம பெட்டியிலே இருக்கிற பணத்தை, வேறு பெட்டியிலே தேடி நேரத்தை வீணாக்கியிருக்கிறோம்.'

மனிதர்களும் இப்படித்தான்... தங்களுக்குள்ளே இருக்கிற ஆற்றலைப் புரிந்து கொள்ளாமல் அடுத்தவர்களைப் பார்த்து ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

(தொடரும்)




# புதுசா கத்துக்குங்க!

மாடியாத்து மாலாவும் பக்கத்தாத்து செல்வியும் வந்து உக்காந்துண்டிருக்கா. அவாத்து நண்டு சுண்டுகள்லாம் கொறிக்க ஏதாச்சும் பண்ணிக்குடுன்னு படுத்தறாளாம். புதுசா ஏதாச்சும் சொல்லுங்கோங்கிறா. என்ன பண்றது? 'சரி வாங்கோ'. கிச்சனுக்குள்ளார அழைச்சிண்டு வந்துட்டேன்.

'அதோ டப்பால இருக்கு பாருங்கோ. மைதா 150, வெண்ணெய் ஒரு 50 கிராம் எடுத்துக்கோங்கோ."

"அதான் எனக்குத் தெரியுமே."

"அப்புறம் சர்க்கரை மூணு ஸ்பூன், வெனிலா எஸன்ஸ் கொஞ்சம் எடுத்துக்கோங்கோ."

"அதான் எனக்குத் தெரியுமே."

"தோ பாருங்கோ மாமி. இந்த டணால் தங்கவேலு கிண்டலெல்லாம் வேணாம். ஒழுங்கா பண்ணுங்கோ."

"கோச்சுக்காதடி மைக்ரோ, சொல்லு."

"எல்லாத்தையும் ஒண்ணாக் கலந்து ஸாஃப்டா பிசைங்கோ, ஈரத்துணி எடுத்து சுத்தி, ரெண்டு மணி நேரம் ஊற விட்டுட்டு, சின்னதா ஒரு சீரியல் பாருங்கோ."

"ஆச்சா? இப்போ மாவை மெல்லிசா உருட்டித் தேய்ச்சு, Bow மாதிரியோ, பட்டாம்பூச்சி மாதிரியோ, உங்க வைரத்தோடு டிசைன்லேயோ கட் பண்ணிண்டு, டால்டாவை உருக்கி அதில கோல்ட் கலர் வர்றாப்பல பொரிச்சு எடுங்கோ... அப்புறம் ஐஸிங் சர்க்கரையைத்தூவி, உங்காத்து வாண்டுகளுக்குக் கொடுங்கோ. 'ஜே' போட்டுண்டு சாப்பிடுவா, பாருங்கோ!"









# ஓமன் - 4

பத்தொன்பது நாடுகளைச் சேர்ந்த நூற்றி ஐம்பது பேரறிஞர்கள், பலப்பல டிசைனர்கள், சுற்றுச் சூழல் வல்லுனர்கள்... இன்னும் பல முக்கியஸ்தர்கள் ஒன்றுகூடி, பீஜிங்கில் மூன்று நாள் உச்சி மாநாடு நடத்தியிருக்காங்க... உலக அமைதிக்கோ ஆசியாவின் பொருளாதார பிராப்ளம்களை அலசறதுக்கோ நடக்கலை இந்த சம்மிட்!

பின்னே...?

அதையெல்லாம் விட முக்கியமான டாய்லெட் அமைப்பு மற்றும் மெய்ன்டனன்ஸ் பத்திதான் இந்த மாநாடு. நாலாவது வருஷமா இதை நடத்துறாங்க. "நல்ல டாய்லெட்டுகள் மனிதனின் அடிப்படை உரிமையாக்கும். அது ரொம்பவே புறக்கணிக்கப்பட்டு வருது..." ன்னு வருத்தப்பட்டிருக்கார் உலக டாய்லெட் ஆர்கனைஸேஷனைச் சேர்ந்த ஜாக் சிம்...!

அடுத்த உச்சிமாநாட்டை இந்தியாவுல நடத்திக்கோங்க சிம்... இங்கே மனிதர்கள் உரிமையோடு டாய்லெட்டுகளைப் புறக்கணிக்கறதைப் பார்ப்பீங்க!



ஷாருக்கான் வீட்ல திருட்டுப்போனது தெரியுமா உங்களுக்கு... 4.6 லட்ச ரூபாய் மதிப்புக்குப் பணமும் நகைகளும், மும்பை புறநகர்ல இருக்கற அவர் பங்களாலேருந்து சுருட்டப்பட்டிருக்கு... "என்ன? இவ்ளோ பெரிய நடிகர் வீட்ல இவ்ளோதான் கிடைச்சுதா?"ன்னு இதயமே இல்லாம கேப்பீங்கன்னு தெரியும்... திருடுபோன திங்ஸ், மனி எதுவுமே ஷாருக்கோடது இல்லையாம்... எல்லாமே அவரோட 'ஏழை' உறவினர்களோடதாம்!

பணக்கார அண்ணன், ஏழைத் தம்பிக்கு உதவிக்கரம் நீட்டறார்னு இன்னொரு நியூஸ் - சச்சினோட நெக்ஸ்ட் புராஜக்ட், ப்ரீமியர் ஹாக்கி லீக் போட்டிகளின் விளம்பரத்துக்கு மாடல் பண்றதுதான்! வர வருஷம் ஜனவரி மாசம் ஆரம்பிக்கவிருக்கு இந்தப் போட்டி. கிரிக்கெட்டைக் காண்பிச்சு ஹாக்கியை விற்கிற முயற்சி, ரியலி ஸாட்...!



இந்தியாவையே கலக்கியிருக்கிற அரெஸ்ட் பத்தி கமி ஒண்ணும் சொல்லாட்டி எப்படி...? அடிபடற வதந்திகளையெல்லாம் விட்டுடுவோம். குற்றச்சாட்டு உண்மையாயிருந்தா, நம்பிக்கைல அடி விழுந்து குலை நடுங்கும். 'அது பொய். எல்லாமே அரசியல் ஆதாயத்துக்காக' அப்படின்னு ஆயிட்டா, 'அரசியல் உள் நோக்கம் இந்த அளவுக்குத் துணியுமா!' அப்படிங்கற கிலி பிடிச்சு நம்மளை ஆட்டும். டீப்பா யோசிச்சா 'ஓமன் ஃபோர்' பார்க்கிற மாதிரி பயமுறுத்துதுப்பா...!

ஆகவே மன்ற உறுப்பினர்கள் ஆமென், அல்லாஹு அக்பர் சொல்லியோ, ஸ்ரீராம ஜெயம் எழுதியோ, கூறாமல் சன்னியாசம் கொண்டோ சாந்தப்படுத்திக்கோங்க!

அமி



# சின்னான் செய்திகள்

பீப்..பீப்..பீப்...பீப்...னு சின்னானோட சின்ன செல்லுல சின்னதா 'மெஸேஜ்' டோன் அடிச்சது. லைட்டா சந்தனவாசம் வேற அடிச்சுது. ஓப்பன் பண்ணிப்பார்த்தா ''நான் இன்னும் உயிரோடதான் இருக்கேன்'' அப்படின்னு வீரப்பன் மெஸேஜ் அனுப்பியிருக்காரு. ஆகா குசும்பை ஆரம்பிச்சுட்டாங்கப் பான்னு டெலிட் பண்ணினேன். போன வாரம் தமிழ்நாட்டுல இந்த எஸ்.எம்.எஸ். தான் ஹாட். வர்ற வாரம் சங்கரராமன் 'நான் உயிரோட இருக்கேன்'னு கூட மெஸேஜ் அனுப்பலாம்.

ரஷியாவில் எம்.பி.பி.எஸ். படிச்சுட்டு வந்து, இங்க 'சிகிச்சை' செய்ய, கிட்டத்தட்ட 5000 பேர் இந்திய மருத்துவக் கவுன்சிலுக்கு மனு போட்டிருக்காங்களாம். ''ஸ்கிரீனிங் டெஸ்ட்னு ஒண்ணு இருக்கு! அதை முடி! ஸ்டெதாஸ் கோப்பைப் பிடி''ன்னு சொல்லிப்புட்டாங்களாம். 'ரஷ்யாவுல படிச்ச நாங்களெல்லாம் என்ன வசூல் ராஜா எம்.பி.பி.எஸ்-ஆ'ன்னு கோபத்தோட கோர்ட்டுக்குப் போனாங்களாம். கோர்ட்டும் 'பெப்பே' காட்டிடுச்சாம். டெஸ்ட் தானப்பு! உங்களுக்கும் மார்க்கபந்து (கிரேஸி மோகன்) மாதிரி யாரும் கிடைக்க மாட்டாங்களா!

பதினாறு வயசுப் பையன் ஒருத்தன் பதுங்கிப் பதுங்கி, மீனம்பாக்கம் சுவரேறிக் குதிச்சிருக்கான். போலீஸ்கிட்டயும் மாட்டிக்கிட்டான். மேற்கொண்டு விசாரிச்சப்போ, ''குடும்பக் கஷ்டம், ஆந்திராவுல இருந்து திருட்டு ரயில்ல இங்கே வந்தேன். பொழப்பு ஓடல. அதான் ஹைதராபாத்துக்கு திருட்டு விமானத்துல போயிரலாம்னு நெனச்சேன்'னு சொல்லியிருக்கான். விமானத்துல டிக்கெட் இல்லாட்டி, பாதி வழியில இறக்கி விடமாட்டாங்கன்னு 'வடிவேலு' மாதிரி யோசிச்சு, எக்குத்தப்பா மாட்டிக்கிட்டான் போல!

'அம்மா ஆகப் போறேன்'னு சந்திரமுகிக்கு 'சாக்லேட்' கொடுத்துட்டு சிம்ரன் ரன் விட்டுட்டாங்களாம். ஆனா கமலோட 'மும்பை எக்ஸ்பிரஸ்'ல ஏற்கெனவே 'அம்மா' ஆன நடிகை நடிக்கப் போறாங்களாம். அதுவும் குழந்தையோட! யாரு? 'வெண்ணிலவே.. வெண்ணிலவே... விண்ணைத் தாண்டி வருவாயா'ன்னு ஏங்கிக் கிடந்தோமே - கஜோல் 'ஜாலியா' திரும்ப வந்துட்டாங்க.



# சத்தியப்பிரியன்

**வ**ரும்பொழுதே திரும்பும் பயணத்துக்கு முன்பதிவு செய்து வந்திருந்ததால், மறுநாள் இரவு இரயிலுக்கே அருணாசலம் விசாலாட்சியைக் கூட்டிக் கொண்டு கிளம்பினான். மறுநாள் காலையில் வழக்கம்போல் கதிரேசன் ஆறுமணிக்கு வந்து கதவைத் தட்டினான்.

"அவுக கிளம்பிப் போயாச்சா?" எனக் கேட்டபடி அவள் கொடுத்த காப்பியைக் குடித்தான். மதுராவை எழுப்பி பல் விளக்க வைத்து, குளிப்பாட்டி, தலை துவட்டி பூஜை அறையில் கொண்டு நிறுத்தினான். சிவபுராணம் சொல்லிக் கொடுத்தான்.

# வலம்புரி முத்து

*புல்லாய்ப் பூடாய்ப்*
*புழுவாய் மரமாகிப்*
*பலவிருகமாகிப்*
*பறவையாய்ப் பாம்பாகிக்...*

மதுராவும் ததக் பொதக் என திரும்பிச் சொன்னது.

''நல்லாச் சொல்லுஞ்ச. நீ பெரிய பொண்ணா ஆனா இப்படி யார் ஒனக்கு சிவபுராணம், கோளறு பதிகம் எல்லாம் சொல்லித் தருவாக?''

"ஏன் நீ சொல்லித் தர மாட்டியா?" என்றாள் தாமரை, அவனிடம் சிற்றுண்டித் தட்டை நீட்டியபடி. கதை சொல்லியபடி, பதம் பார்த்து சிறு கரண்டியால் மதுராவுக்கு ஊட்டி விட்டான்.

"நீ கதை சொல்லி ஊட்டி விடுவதைப் பார்த்தா, எனக்கே ஒங்கிட்ட ரெண்டு கவளம் வாங்கிக்கிடலாம்னு வருது."

''நான் இந்த ஏரியாவை விட்டே போயிடலாம்னு இருக்கேன் தாமரை'' என்றான் தொடர்பில்லாமல்.

"காரைக்குடிக்கா? மதுரைக்கா?"

''மேற்கு மாம்பலத்தை விட்டு, கோடம்பாக்கமோ, கே.கே. நகரோ.''

"ஏதோ ஒண்ணு. நான் இங்கே இருப்பதால் உன் சந்தோஷமும், நிம்மதியும் குறையும் என்றால் நான் உனக்குப் பாரமாக இருக்கவில்லை."

"நன்றி தேவதூதனே! ஆனால் நீ போவதால் மட்டும் என் சந்தோஷ



# 30

மும், நிம்மதியும் குறையா மலா போகும்?"

"புரியாமல் பேசுகிறாய் தாமரை."

"இல்லை கதிர்! நீ போவதைத் தடுக்கவே மாட்டேன். ஆனால் அதற்கு முன்பு தீர்க்கப்படாத விஷயங்கள் உள்ளன. அவற்றைத் தீர்த்துக் கொள்வோம்."

"என்ன?"

"உன்னால் இன்று உன் பாஸிடம் லீவு கேட்க முடியுமா?"



"எதற்கு?"

"என்னுடன் நீ வெளியில் வரவேண்டும்."

"எங்கே?"

ஆழ்வார்ப்பேட்டையில் மிக பிரும்மாண்டமான வீட்டின் முன்பு தாமரை அவனை அழைத்துக் கொண்டு சென்றாள். காவல்காரன்; தோட்டக்காரன்; நாய் வீடு, புல்வெளி, பூஞ்செடிகள் என அந்த பங்களா வேறு ஒரு தோற்றத்தில் இருந்தது.

தாமரை உள்ளே நுழைய நுழைய வீட்டில் உள்ள பணியாட்களிலிருந்து எல்லாரும் வரவேற்றது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. இது போன்ற மாய சிறுபிள்ளை சந்தோஷங்களில் ஈடுபாடு கொண்டுள்ள பெண் அவள் இல்லை என்றாலும், அவனுக்குக் காற்றில் கை துழாவி கண்ணாமூச்சி ஆடப் பிடித்திருந்தது.

'தாமரை! சொகமா இருக்கியா?" என வயதான மாது ஒருத்தி அவளுடைய கையைப் பிடித்துக் கேட்டாள். அந்த மாது அந்த் வீட்டில் காணப்பட்ட உயர்ந்த தரமான பொருள்களின் சொந்தக்காரியைப் போல் அதே நவீனத்துடன், அதே உயர்தன்மையுடன் காணப்பட்டாள். அவளுடைய எளிமையான, ஆனால் உறுதியான தோற்றமும், கருணை பொங்கும் கண்களும் கதிரேசனுக்குப் பிடித்திருந்தது.

தியாகராஜன் ஒரு அறையிலிருந்து வெளிப்பட்டு "வாம்மா! மதுரா எப்படி இருக்கா? அருணாசலம் தான் தாக்கல் சொல்லுவான். ஈமெயில் அனுப்பவோ, தொலைபேசியில் அழைக்கவோ எனக்கு விருப்பமில்லை தாமரை. நீ நிர்ணயம் செய்து கொண்ட வாழ்வில் சந்தோஷமாக இருக்கும்போது, உன்னை மேலும் மேலும் நிர்பந்தப் படுத்த நான் யார்?" என்ற அவரது நல விசாரிப்பு, அவரை மிக கண்ணியமானவராக உயர்த்திக் காட்டியது.

தாமரை கதிரேசனை அறிமுகப் படுத்தினாள். "இவர் கதிரேசன். இவரைப் பற்றி நீங்கள் அறிந்திருக்க வாய்ப்பில்லை. திருஞானத்துக்கும், எனக்கும் திருமணமாவதற்கு முன் நான் மணம் செய்து கொள்ளலாம் என்றிருந்தவர்."

"வெரிகுட்!" தியாகராஜன் மனத்தில் தெளிவு பிறந்தது.

"உனக்காக என் வீட்டுக் கதவுகள் எப்பவும் திறந்திருக்கும்னு சொல்லுவீங்களே, அப்படி ஒரு திறந்த கதவின் வழியாக உள்ளே நுழையப் பிரியப்படுகிறேன்."

"தாராளமாக" என தியாகராஜன் கதிரேசனைப் பார்வையிட்டார்.

"காரைக்குடியில் யார் வீட்டுப் பிள்ளை நீ?" என்றார் தியாகராஜன்.

"வள்ளி மெடிக்கல்ஸ் சிதம்பரஞ் செட்டியார் மகன் நான்."

தியாகராஜன் சிறிது நேரம் கண்களை மூடிக் கிடந்தார். "தீ விபத்து, போலீஸ் விசாரணை எல்லாம் நடந்ததே, அது தானே?" என்றார்.

"தாமரை இதன் பின்னணியில் இருந்தாள் என்பதை என்னால் இப்பொழுதுதான் ஒரு வடிவுக்குக் கொண்டு வர முடிகிறது. இரண்டு, மூன்று வாரங்களாகவே இதைப் பற்றிய சிந்தனையாகவே இருந்து

## ஓடிவரும் பரந்தாமன்!

விவசாயம் முதல் பத்திரிகை ஏஜென்ஸி வரை, நிறைய வேலைகளைச் செய்தவன் நான். இப்போது பிள்ளைகள் பார்த்துக் கொள்கிறார்கள். நான் சாயி பக்தன். பாபாவின் சத்தியம், தர்மம், சாந்தி, பிரேமை, அஹிம்சை என்னும் கோட்பாட்டைக் கடைப்பிடிக்கிறவர்கள் பூரண மனிதர்களாகத் திகழ்வார்கள். அவர்களால் சமுதாயம் மேம்படும். உலக சமாதானம் ஏற்படும். மனத்தை அமைதியாக வைத்துக் கொள்ள, சாயி நாமம் உதவுகிறது. கன்றின் குரல் கேட்டு வரும் கறவை போல, பக்தன் குரல் கேட்டு ஓடிவரும் பரந்தாமன் அவர்! இதை உணர்ந்து பார்த்தால்தான் தெரியும்.



தொகுப்பு : அனு

படங்கள்: மீடியா ராமு

• தில்லை

ஸ்ரீசாயி அனுபவம்!

வருகிறேன். தாமரையை நேரில் பார்த்து இது குறித்துப் பேசுவது கூட நல்லது என நினைத்தேன். மூன்று, நான்கு வருடங்களுக்கு முன்னால் சிங்கப்பூர் நிறுவனத் திற்கு வாகன ஓட்டுனராய் அனுப்பப்பட்ட அண்ணாதுரை என்பவன், மீண்டும் சென்னை வந்து சில தகவல்களைச் சொன் னான். என்னால் ஜீரணிக்க முடியாதவை. பழனி பாதயாத் திரையின் பொழுது நாகப்பனும், திருஞானமும் செய்த சதி வேலைகளைக் கூறினான். அந்தக் கதிரேசனா?'' என்றார்.

''ஆம்'' என்ற தாமரை ''கதிரே சன்! இவர்தான் பெரிய தொழி லதிபரும், திருஞானத்தின் தந் தையுமான திரு. தியாகராஜன்'' என்றாள்.

''வணக்கம்'' எனக் கரங்கு வித்தான் கதிரேசன்.

''மாமனார்னு அறிமுகப் படுத்த மாட்டியா?'' என்றார் தியாகராஜன் சிரித்தபடி.

தாமரை பதில் பேசவில்லை.

''நீ தட்ட நினைத்த கதவு எது?'' என்றார்.

''ஊரை விட்டு, சுற்றத்தை விட்டு தனியாக மேற்கு மாம் பலம் சந்தில் உழன்று கொண்டி ருந்தான். தனியா இடம் பார்த்து ஆள், அம்பு, படையுடன் அவன் ஒரு பெரிய மருந்துக் கடையை நிறுவணும். அதற்கான ஏற் பாட்டை நீங்க செஞ்சு தரோணும். அது ஆள் பலமாக இருந்தாலும் சரி, பணபலமாக இருந்தாலும் சரி, செஞ்சு தருவீங் களா?''

''கண்டிப்பா! கண்டிப்பா! எனக்குத் தம்பியை விட்டு ஒரு ப்ராஜக்ட் போட்டுத் தரச் சொல்லு! கடை அமைப்பு, மருந்து களின் விபரம், மற்ற பொருள்கள் பற்றிய விபரம் எல்லாவற்றையும் போட்டு ஒரு எஸ்டிமேஷன் தரச் சொல்லு! உடனே முடிச்சுக் கொடுத் துடறேன்.''

''மிக்க நன்றி ஐயா! இன்னும் ஒரே ஒரு விஷயம்.''

''சொல்லு.''

''வேற்று மனிதர்களை மூலமா உங்க காதில் விழுவதற்கு முன்னால், நானே ஒரு விஷயம் சொல்லிடலாம்னு இருக்கேன்.''

தியாகராஜன் தாமரையை நிமிர்ந்து பார்த்தார். கதிரேசனை நிமிர்ந்து பார்த் தார். தாமரை இவனுடைய அனுமதி யின்றி அழைத்து வந்தது, பேசுவது, இது வெல்லாம் முற்றுப் பெறாத விளை யாட்டின் பகுதிகளாகவே தெரிந்ததால், எந்த பாவமுமின்றி இருந்தான்.

''சொல் தாமரை.''

''கதிரேசன் எனக்கு என் நிறுவனம் கொடுத்த க்வார்டர்ஸில்தான் ஒரு நண்ப னாய், ஒரு துணைவனாய், என் மனப் பகிர்வுகளைப் பகிர்ந்து கொள்பவனாய், எனக்குத் துணையாக இருக்கிறான். இதை வேறு விதமாக மற்றவர்கள் உங்களுக்குத் திரித்துக் கூறுவதற்கு முன்பு, நானே கூறி விடலாம் எனத் தெரிவிக்கிறேன்.''

''நன்றி தாமரை. என் மீது நீ கொண்டுள்ள மதிப்பிற்கு நன்றி.''

**வீ**ட்டிற்கு வந்ததும் கதிரேசன் கேட் டான்.

''உன்னிடம் பிச்சை போடுன்னு கேட்டேனா?'' என்றான் தாமரையைப் பார்த்து.

''என்ன கதிர் சொல்ற?''

''சொல்றாங்க சோத்துக்கு உப்பில் லைன்னு. நீ எனக்காக அவரிடம் யாசகமா கை ஏந்தி நின்னப்ப, எவ்வளவு அவமானப்பட்டுப் போயிருப்பேன் தெரியுமா? வெறும் ரெண்டாயிரம் ரூபா மாசச் சம்பளம் வாங்கினா உன்னோட நான் தங்கியிருக்க முடியாதா?''

''அது யாசகம் இல்லை கதிர். எனக் காக அவர்கள் தீர்க்க வேண்டிய கணக்கு. அப்பவே பைசல் பண்ணி இருக்கோணும். நான் லேட்டாப் போயி நின்னேன். அவ் வளவுதான்.''

''திருஞானத்தை நீ ஏன் கலியாணம் செஞ்சுகிட்ட?''

''ஏன்னா, அந்தச் சூழலில் உன்னை என்னால் மாசறு பொன்னா நிருபிக்க முடியலை.''

''மாசறு பொன்?''

''ஆமாம் சிலப்பதிகாரச் சொல்.''

''வேற எந்தக் காரணமும் இல்லியா?''

''அருணாசலம் விஷம் குடிக்கிறதா நடத்தின ட்ராமாவில், திருஞானத்தைக் கலியாணம் செஞ்சுக்கோணும் என்ற நிலைக்குத் தள்ளப் பட்டேன்.''

''அப்ப உனக்கு ஒரு கடப்பாடு இருந்தது.''

''கடப்பாடுன்னா என்ன அர்த்தம்? புரியறா மாதிரி பேசு.''

''ஆப்ளிகேஷன்.''

''ஆமாம். எனக்கும் கடப்பாடு இருந்தது.''

''அதே கடப்பாடு உன் மாமனாருக்கும் உண்டு இல்லியா?''

''ஆமாம்.''

''அப்படி ஒரு கடப்பாட்டினால்தான், இழந்த காதலை ஈடு செய்ய வேண்டும் என்ற கடப்பாட்டினால்தானே உன் மாமனாரிடம் நீ எனக்காகப் பரிந்துரை செய்தது? ஆப்ளிகேஷனே இல்லாத ஒரு வாழ்வை யாராலும் வாழ முடியாதா தாமரை?''

''கதிரேசன்!'' தாமரைக்கு வாயடைத்து விட்டது.

''நாம இப்படியே இருப்போமே தாமரை. தனியாக் கடை போடணும்னா நானே உன்னிடம் பணம் கேட்கிறேன். அட்வான்ஸ் கொடுக்க பாங்க் இருக்கு. எனக்குத் தொழில் பத்தின நம்பிக்கை இருக்கு. இதுக்குப் போயி நீ இன்னொருத்தர்கிட்ட கை ஏந்திகிட்டு... போ! போ!'' என்றான்.

அவனைப் பார்க்க தாமரைக்குப் பிரமிப்பாக இருந்தது.

(தொடரும்)

# ஸ்ரீசாயி அனுபவம்!

## தன்வந்த்ரி பாபா

நான் ஜெய கோபால் கரோடியா பள்ளியில் உதவி தலைமை ஆசிரியராக இருக்கிறேன். சில வருஷங்களுக்கு முன் சர்க்கரை வியாதி முற்றிய நிலையில் ஏ.ஜி. ஹாஸ்பிடலில் சேர்க்கப்பட்டேன். காலில் புண் ஆறாததால், காலையே வெட்டி எடுக்க வேண்டும் என்று சொல்லி, ஆபரேஷனுக்கும் நாள் குறித்து விட்டார்கள். அப்போது எங்களுடைய குடும்ப நண்பரான பினய்பாபு, என்னைக் காண வந்தார். அவர் பிரசாந்திக்குச் சொந்தமான 'சாய்கீதா' என்ற யானையைப் பராமரிக்கும் கால்நடை மருத்துவர். ஆறுதல் சொல்லி விட்டுக் கிளம்பும்போது, 'சாயி அமுதம்' என்று சொல்லப்படும் பிரசாதத் தேனை, ஒரு சொட்டு கொடுத்துவிட்டுச் சென்றார். அன்று இரவு என் காலை யாரோ மென்மையாக வருடி விடுவது போல இருந்தது. நான் ஏதோ கனவு என்று நினைத்துவிட்டேன். மறுநாள் ரவுண்ட்ஸுக்கு வந்த டாக்டருக்கு ஒரே ஆச்சரியம்! என் காலில் இருந்த புண் சுத்தமாக ஆறியிருந்தது. ''ஆபரேஷன் தேவையில்லை'' என்று சொல்லி அனுப்பி விட்டார்கள். அந்தச் சம்பவத்துக்குப் பிறகு எங்கள் குடும்பமே ஸ்ரீசாயிபாபாவின் பக்தர்களாகி விட்டோம். பிரசாந்தி ஆஸ்பத்திரி முகப்பில், தன்வந்தரி சிலை வைக்கப்பட்டிருக்கிறது. அந்த தன்வந்தரிதான் பாபாவாக இருந்து சிகிச்சை அளிக்கிறார் என்பதைப் பரிபூரணமாக நம்புகிறோம்.



• பாலசுப்ரமணியம்



# நடக்குமென்பார்; நடக்கும்!

**சிம்ம ராசிக்காரரான நமீதாவை அதிர்ஷ்ட தேவதை தேடி வருகிறாள்.**

**மேஷம்** : 'உன்னை நம்பித் துணிவோடு உறுதியோடு போராடு'ன்னு சொன்னது உங்களுக்காகத் தாங்க. செவ்வாய் இருக்காரே, அவர் ஏழாவது வீட்டில நின்னு தன் வீட்டைப் பாக்குறாரு. அதனால நன்மைகள் கிடைக்கிற நேரம் வந்து சேர்ந்து மகிழ்ச்சி கொடுக்கும். பெரியவங்க ஆசி, தேவைக்கேத்த பண வசதி எல்லாம் கிடைக்கும். ஆபீஸ்ல சுமுகமா இருக்கப் பாருங்க. அரசியல்வாதிகள் எச்சரிக்கையா இருப்பது நல்லது. தொழில், வியாபாரம்னு இருக்கறவங்களுக்கு அளவோட லாபம் கிட்டும். குடும்பத்தில வீண் வாக்குவாதம், கடுமை கூடவே கூடாது. இனிமையாப் பேசிப் பழக முயற்சி செய்யுங்க. பெண்களுக்கு நல்ல செய்தி வந்து சேரும்.

**ரிஷபம்** : பொதுவா எல்லாவகையிலேயும் முன்னேற்றமா இருக்கும். எதிர்ப்பு, தடங்கல்கள் விலகி மகிழ்ச்சி கூடும். பண வசதி திருப்தியா இருக்கும். அப்புறம் என்ன, உற்சாகமான வாரம் தானே? உத்தியோகத்திலயும் எதிர்ப்பு மறைஞ்சு அனுகூலமான பலன்கள்தான். சுய தொழில், வியபாரம்னு இருக்கிறவங்க முன்னேறுவாங்க. பண நெருக்கடி மெல்ல மறையும். நின்னுபோன பணம் வந்து சேர்ந்துடும். சட்டம், காவல் துறையில இருக்கிறவங்க சவால்களை சமாளிக்க வேண்டியிருக்கும். குடும்பத்தில இதுவரை இருந்த குழப்பங்கள் மறைஞ்சு குதூகலம் நிறையும். பெண்களுக்கு புதிய பொருள் சேர்க்கையால மகிழ்ச்சி கிட்டும்.

**மிதுனம்** : அதிர்ஷ்டம்னு ஒண்ணு உங்க பக்கத்தில இருந்தாத்தான் உங்க திறமை, அறிவு எல்லாம் பட வேண்டியவங்க கண்ணுல படும். உங்களுக்கு அந்த நேரம் கூடிவந்தாச்சு. வெளிநாட்டுத் தொடர்பால உங்களுக்கு அனுகூலம் கூட்ட வந்துகிட்டே இருக்கு. கல்வித்துறையில இருக்கிறவங்களுக்கு யோக காலம். உத்தியோகத்தில கடுமையாக உழைக்க வேண்டி வரும். ஒரு எதிர்பாராத திருப்பமும் நேரலாம். பொறுப்பு கூடும். சுய தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்களுக்கு செலவு கூடும். கொடுக்கல் வாங்கல் கை கொடுக்கும். புதிய தொழில் முயற்சி ஏதுமிருந்தா நிதானிச்சு செய்யுங்க. குடும்பத்தில செலவு கூடப் போகுது, உஷாரா இருங்க. கொஞ்சம் குடும்பத்தாருக்கு விட்டுக் கொடுத்து நடக்கிறது நல்லது.

**கடகம்** : உங்க ராசியில செவ்வாயும் கேதுவும் உங்களைக் கவுத்துவிடலாமான்னு பாக்கிறதால, எந்தக் காரியமானாலும் பலமுறை யோசிச்சு செயல்படுங்க. புது அறிமுகம் சில கிடைக்கலாம். தெய்வீக ஈடுபாட்டைக் கூட்டிக்கறது நல்லது. உத்தியோகத்தில சில பிரச்னைகள் ஏற்படலாம். விரும்பாத இடமாற்றம் நேரலாம். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கையா இருங்க. எலக்ட்ரிகல்ஸ், டிராவல்ஸ், கலைத்துறை, ரியல் எஸ்டேட் தொழில்கள் ஆதாயம் தரும். குடும்பத்தில பொதுவான பலன்கள் தடைப்படாது. ஆரோக்கியத்தில கவனம் தேவை. பெண்களுக்கு மகிழ்ச்சியான வாரம்.

**நவம்பர் 24 முதல் 30 வரை**

**• அக்னிசர்மா பக்கம் •**

## பரிகாரம்

'என்னன்னு புரியாத சின்ன குறை. எல்லா முயற்சிகளும் சரியா நிறை வேறமாட்டேங்குது'ன்னு கவலைப்படறீங்களா? சந்தர்ப்பவசத்தால தீர்க்க முடியாமல் போன பித்ரு கடன், நன்றிக்கடன், செஞ்சோற்றுக் கடன் தாங்க அந்தக் குறை. உங்க குறையையும், கடனையும் தீர்க்க நெல்லை ஜங்ஷனுக்கு வாங்க. சஞ்சீவி வரத ஆஞ்ச நேயர் காத்திருக்கார். செவ் வாய்க் கிழமையில, துவரை தானியம் வெச்சு, தேங்காய் உடைச்சு, பசு நெய்யில தாமரைத் தண்டுத் திரியால தீபம் ஏற்றி பிரார்த்தனை பண்ணினா, உங்க குறை போயே போச்சு!

- வி



**சிம்மம் :** அதிர்ஷ்ட தேவதை உங்களைத் தேடி வந்துகிட்டேயிருக்கா. எடுத்த காரியங்களெல்லாம் திட்டம் போட்டபடி நிறைவேறும். எதிரிகள் எங்கே ஓடறதுன்னு தெரியாம பதுங்கிடுவாங்க. பண நடமாட்டம் சரளமா இருக்கும். உத்தியோகத்திலயும் உங்க அதிர்ஷ்டம் கொடி கட்டுது. புதிய முயற்சிகள் ஏதும் இருந்தா ஆரம்பிங்க. வியாபாரம், தொழில்கள்ல இருக்கிறவங்க மடமடன்னு முன்னேறிடுவாங்க. எதிர்பார்த்த உதவிகள் தேடி வந்து சேரும். குடும்பத்தில குதூகலம் நிறையும். இதுவரை இருந்த கருத்து வேறுபாடு மறையும். பெண்கள் எண்ணப்படியே எல்லாம் நடக்கும்.

**கன்னி :** உங்க தெய்வபலம் கூடி பாதுகாப்பா நிக்கிதுங்க. புது அறிமுகம், துணிவு, நம்பிக்கை எல்லாம் கிடைக்கும். முக்கியமா ஒண்ணு ஞாபகம் வெச்சுக்கோங்க. எந்தக் காரியமானாலும் பெரியவங்களக் கேட்டு செய்யுங்க. யாரானாலும் கடுமையா பேசிடாதீங்க. உங்களுக்கு எல்லா நன்மைகளும் கூடி வந்துடும். உத்தியோகத்திலயும் அனுகூலமான திருப்பம் நேரிடும். புதிய முயற்சி அளவோட நன்மை தரும். வியாபாரிகள் தொழிலாளிகள் நன்மை பெறுவாங்க. பொருளாதாரம் கொஞ்சம் ஏறித்தான் இறங்கும். குடும்பத்தில எதிர்பாராத செலவுகள் வரும், உஷாரா இருங்க. யாருக்கும் ஜாமீன் கையெழுத்து போடாதீங்க. பெண்கள் ஆரோக்கியத்தில கவனமா இருங்க.

**துலாம் :** மெகாசீரியலாப் போய்க்கிட்டிருந்த உங்க முயற்சியெல்லாம், ஒரு முன்னேற்றமான திருப்பத்துக்கு வந்து சேருகிற நேரம்க இது. பெண்கள் உங்களுக்கு அனுகூலமான உதவி செய்யப் போறாங்க. உங்க மதிப்பும் அந்தஸ்தும் குறையாம நிலைக்கும். உத்தியோகத்தில நிம்மதியான சூழல் நிலவும். தடைகள் எல்லாம் விலகி முன்னேற வழி கிடைக்கும். சுயதொழில், வியாபாரங்கள் முன்னேற்றமும், லாபமும் காணும். கூட்டுத் தொழில் பண்றவங்க கொஞ்சம் எச்சரிக்கையா இருக்கணும். சிக்கனம் உங்களுடைய முக்கியத் தேவை. குடும்பத்தில பொதுவா அமைதி இருந்தாலும், ஆரோக்கியத்திலும், உடன்பிறந்தவர்களிடமும், கவனமா இருங்க. பெண்கள் எதிர்பார்த்த நல்ல செய்தி வந்து சேரும்.

**விருச்சிகம் :** உங்க புத்திசாலித்தனமும், பேச்சுத் திறனும் முழுசா உங்க காரியசாதனைக்கு உதவற நேரம்க இது. உங்க பொருளாதாரம் உயரும். பெரியவங்க ஆசி கிடைக்கும். உத்தியோகத்தில அனுகூலமான திருப்பம் காத்திருக்கு. புதிய முயற்சி ஏதும் இருந்தா ஆரம்பிங்க. தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்க புதிய தொழில் தொடங்க முயற்சிக்கலாம். வெளிநாட்டுத் தொடர்பு அனுகூலம் தரும். குடும்பத்தில குருபலன் நிறைஞ்சிருக்கிறதால சுப காரியங்கள் ஈடேறும். வீடு, வாகனம், சொத்து, மக்கட்பேறுன்னு செல்வங்கள் சேர்ந்து மகிழ்ச்சி தரும். உடன் பிறந்தவர்கள் சிறு பிரச்னை கொடுக்கலாம். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.

**தனுசு :** உங்க துணிவும் நம்பிக்கையும் கூடி திறமைக்கு பக்கபலமா நிற்கும்.

எடுத்த காரியங்களை நல்லபடியா பாராட்டோட முடிப்பீங்க. புதிய அறிமுகங்கள் சில கிடைக்கும். ஆன்மிக ஈடுபாடு மன அமைதி தரும். உத்தியோகத்தில குறுக்கீடுகள் மறைஞ்சு அனுகூலம் கிட்டும். தொழில் வியாபாரம்னு இருக்கிறவங்களுக்கு கொஞ்சம் ஏற்ற இறக்கமான நேரம். கவனமா இருங்க. குடும்பத்தில மகிழ்ச்சி நிலவும். இதுவரை இருந்த பிரச்னைகள் ஓயும். பெண்களுக்கு புதிய பொருள் சேர்க்கை, விருந்து, உபசாரம்னு உற்சாகமான வாரம்.

**மகரம்** : குருவருளும், திருவருளும் ஒண்ணாச் சேர்ந்து உங்களுக்குக் கிடைக்கப் போகுது. முக்கியமான திட்டங்களை நிறைவேற்ற ஆரம்பிங்க. திடீர் அதிர்ஷ்டம் ஒண்ணும் காத்திருக்கு, உத்தியோகத்தில பெரிய முன்னேற்றம் கிடைக்குற நேரம்க இது. நிதி நிறுவனங்கள்ல இருக்கிறவங்களுக்கு ஏற்றமான திருப்பம் நேரும். தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்க கொஞ்சம் உஷாரா இருப்பது நல்லது, பொருளாதார நெருக்கடி ஏற்படலாம். குடும்பத்தில நிம்மதி கிட்டும். சுப காரிய முயற்சி அனுகூலமாகும். பெண்களுக்கு எண்ணம் ஈடேறும்.

**கும்பம்** : உங்க ராசியில சனிபகவான் திடமா வந்து உட்கார்ந்து உங்களுக்கு பக்கபலமா இருக்கிறதால, எதிர்ப்புகள் எல்லாம் ஓடி ஒளிஞ்சுடும். உங்க திட்டங்கள் எல்லாம் கச்சிதமா நிறைவேறும். எதிர்பாராத சந்திப்பும், முக்கியஸ்தர் ஆதரவும் காத்திருக்கு. உத்தியோகத்தில உங்க திறமை பாராட்டைப் பெற்றுத் தரும். நிர்வாகத்துறையில இருக்கிறவங்க மேன்மை பெறுவாங்க. சுயதொழில், வியாபாரம்னு இருக்கிறவங்களுக்கு கேட்டபடி அரசாங்க, பாங்க் உதவிகள் கிட்டும். குடும்பத்தில பணத் தேவைகளும், சுப காரிய முயற்சிகளும் பூர்த்தியாகும். பெண்களுக்கு எண்ணம்போல எல்லாம் நடக்கும்.

**மீனம்** : உங்க திறமையும், புத்திசாலித்தனமும் உங்களுக்கு மதிப்பையும் அந்தஸ்தையும் ஏற்படுத்துகிற நேரம் இது. தாமதமாகி வந்த காரியங்கள் நிறைவேறும். உத்தியோகத்தில புதிய பதவியும், பொறுப்பும் கிடைக்கும். தொழில், வியாபாரம் செய்யறவங்களுக்கு எதிர்பாராத லாபம் கிடைக்கும். பண நெருக்கடி விலகும். கூட்டுத் தொழில் முன்னேறும். ஏற்றுமதி - இறக்குமதி தொழில் ஆதாயம் பெறும். குடும்பத்தில் கொஞ்சம் வாக்குவாதம், பிரச்னைன்னு வர வாய்ப்பிருக்கு. பொறுமை, நிதானம் மிக மிக அவசியம். பெண்கள் மக்கள் நலனில் அக்கறை காட்டுங்க. குலதெய்வப் பிரார்த்தனை ஏதும் பாக்கியிருந்தா நிறைவேத்திடுங்க.

## இது நல்ல வாரம்

| கிழமை | தேதி | நட்சத்திரம் | திதி | மற்றவை |
|---|---|---|---|---|
| புதன் | நவ. 24 (கார். 9) | அஸ்வினி | திரயோதசி | பிரதோஷம் |
| வியாழன் | நவ. 25 (கார். 10) | பரணி | சதுர்த்தசி | பரணிதீபம் |
| வெள்ளி | நவ. 26 (கார். 11) | கார்த்திகை | பௌர்ணமி | பௌர்ணமி / ஸர்வாலய தீபம் |
| சனி | நவ. 27 (கார். 12) | ரோகிணி | பிரதமை | |
| ஞாயிறு | நவ. 28 (கார். 13) | மிருகசீரிஷம் | துவிதியை | ஸ்ரீவாஞ்சியம் தீர்த்தவாரி |
| திங்கள் | நவ. 29 (கார். 14) | திருவாதிரை | திரிதியை | |
| செவ்வாய் | நவ. 30 (கார். 15) | திருவாதிரை | திரிதியை | சங்கடஹர சதுர்த்தி |

**எஸ்**.கே.பேராவுக்கு ஐம்பது வயதிருக்கும். மத்திய அரசாங்கத்தில் மிக உயர்ந்தபதவி வகிக்கும் இவரது மிகப் பெரிய பிரச்னை... குறட்டை! அதுவும் எப்படி? கட்டிலே கிடுகிடுக்கும் அளவுக்கு உரத்த சத்தம். நாளாக நாளாக தூக்கத்தில் மூச்சடைத்து விதிர்த்து எழுவதும், பின்னிரவு முழுக்க தூக்கம் வராமல் தவிப்பதும், தொடர்கதையாக, பேரா வாழ்க்கையே வெறுத்து விட்டார். கார் ஓட்டும் போதும், அலுவலகக் கூட்டங்களிலும் தூங்கிப் போனதால் நிறைய தர்மசங்கடம். சரியாக தூக்கம் இல்லாததால் உடல்வலி, கண் எரிச்சல், மனச்சோர்வு, தலைவலி, ஞாபக சக்திக் குறைவு, டென்ஷன் என ஏகப்பட்ட பிரச்னைகள் சங்கிலியாகக்கோத்துக் கொள்ள, விரக்தியின் விளிம்புக்கே போய் விட்டார்.

"எனக்கு இரவு நேரங்களில் மூச்சுவிட முடியலை. குறட்டை அதிகமாக உள்ளது. நான் எந்த நிமிஷமும் மாரடைத்து இறந்து போகலாம். நீ தயாராக இரு'' என்று மனைவியிடம் மனம் விட்டுப் பேசி விட்டார். கலங்கிப் போன அவரது மனைவி, பேராவை அழைத்துக் கொண்டு, நெஞ்சக நோய், இதய நோய், நியூரோ என எல்லா நிபுணர்களிடமும் ஒரு ரவுண்டு காட்டிவிட்டு வந்து விட்டார். குறட்டையும் நிற்கவில்லை. மூச்சடைப்பும் குறையவில்லை. இறுதியில் பேராவின் முழு கேஸ் ஹிஸ்டரியையும் கேட்ட அப்பல்லோ மருத்துவர் டாக்டர் கே.பி. மிஸ்ரா, "இது ஸ்லீப் ஏப்னியாவாக இருக்கக் கூடும். நீங்கள் தூக்கவியல் நிபுணர் டாக்டர் என். ராமகிருஷ்ணனைப் பார்ப்பது தான் உசிதம்'' என்று சொல்லி அனுப்பியிருக்கிறார்.

தெய்வாதீனமாக, அவரது அனுமானம் சரியாக இருக்கவே, இன்று நவீன சிகிச்சை எடுத்துக் கொண்டு, குறட்டையை விட்டு புது வாழ்வு வாழ்கிறார் எஸ்.கே. பேரா.

"**உ**ண்மைதான். எனக்கென்ன ஸார்? நல்லா சாப்பிடறேன். குறட்டை விட்டுத் தூங்கறேன். ஆரோக்கியமா இருக்கேன்'' என்று பெருமையடித்துக் கொள்பவரா நீங்கள்? உஷார்... நீங்கள் ஸ்லீப் ஏப்னியா (Sleep Apnoea) என்ற தூக்கக் கோளாறால் பாதிக்கப்பட்டிருக்கக் கூடும்'' என்கிறார் டாக்டர் என். ராமகிருஷ்ணன்.

சென்னை, அப்பல்லோ மருத்துவமனையின் தீவிர சிகிச்சைப் பிரிவுத் தலைமை மருத்துவராக இருக்கும் இவர், தூக்கப் பிரச்னைகளுக்கு என்றே சென்னை, தி.நகர், பகல்லா ரோட்டில், 'நித்ரா இன்ஸ்டிடியூட் ஆஃப் ஸ்லீப் சயின்ஸஸ்' என்ற கிளினிக் நடத்தி வருகிறார்.

"**உ**ணவு, தூக்கம், செக்ஸ் இவை மூன்றும் மனிதர்களின் ஆரோக்கிய வாழ்வைத் தாங்கும் தூண்கள் போல. அதிலும் தூக்கம் இருக்கே, மிக மிக அத்தியாவசியமான பங்கு வகிக்கிறது. அமைதியாகத் தூங்கும் போது நமது உடல் மட்டுமல்ல, மூளையும் ஓய்வு கொள்கிறது. ஏகப்பட்ட ஹார்மோன் சுரப்பிகள், விதவிதமாகச் சுரந்து, குறிப்பிடத்தக்க விளைவுகளை நிகழ்த்துகின்றன. ரத்த ஓட்டம் சுறுசுறுப்படைகிறது. உடல் வளர்ச்சி அடைகிறது. மனம் புத்துணர்வு பெறுகிறது.



தூக்கக் கோளாறுகள் ஏற்பட்டால், ஆரோக்கியக் குறைபாடு ஏற்பட்டு, தினசரி வாழ்க்கை முறையே தலைகீழாக மாறிவிடும்'' என்று ஆரம்பித்தார்.

'' 'ஸ்லீப் ஏப்னியா' எனப்படும் தூக்கத்தில் மூச்சடைப்பு ஏற்படும் அபாயம்தான், தூக்கக் கோளாறுகளிலேயே முதன்மையானது. தற்போது பரவலாகி வரும் வியாதியும் கூட.

''குறட்டை விடுவது ஆழ்ந்த தூக்கத்தின் அடையாளம் என்று நினைக்கிறார்கள். இது தவறானது. உடல் ஆரோக்கியம் சீர் கெட்டிருப்பதன் அறிகுறிதான் குறட்டை.''

# குறட்டை விபரீதம்!

''குறட்டை ஏன் வருகிறது டாக்டர்?''

''நாம் தூங்கும் போது, சுவாசக் குழாயைச் சுற்றியுள்ள தசைகளும் விரிந்து ரிலாக்ஸ் செய்து கொள்கின்றன. இதனால் சுவாசக் குழாயின் பாதை குறுகிவிடும். குறுகிய துவாரத்தின் வழியாக, மூச்சுக் காற்று செலுத்தப்படும்போது, விஸில் போன்ற சப்தம் கேட்கிறது. அடைப்பு அதிகமாகும் போது, வாய் வழியாகவும் காற்று வெளியாகி, பலத்த குறட்டை சப்தம் கேட்கிறது. சில சமயங்களில் மூச்சு விடுவதில் சிரமம் ஏற்பட்டு, நின்று போகவும் நேரிடலாம். அப்படி நிற்கும் போது, மூளை விழித்துக் கொண்டு, சிக்னல் தருகிறது. உடனே, 'தடால்' என பதறி எழுந்து, மீண்டும் சுவாசிக்க ஆரம்பிக்கிறோம். ஆனால் தூக்கம் கலைந்து விட, 'கொட்டு கொட்டு' என்று விழித்துக் கொண்டு அவஸ்தையாகி விடும். சில சமயம் நோயாளி படுத்துக் கொண்டு தான் இருப்பார். ஆனால் அவரது மூளை மட்டும் விழித்துக் கொண்டு, ஓய்வற்ற நிலையில் இருக்கும்.

''இந்த நிலைமையைத்தான் 'ஸ்லீப் ஏப்னியா' என்கிறோம். இந்தக் கோளாறு வந்தால், இரவு முழுக்க ஒரு மணி நேரத்துக்கு, பத்திலிருந்து நூற்றுக்கும் மேற்பட்ட தடவையாவது தூக்கி வாரிப் போட்டது போல விழித்து கொள்வதும், மூச்சடைத்துப் போய் சுவாசத்துக்குத் தவிப்பதும், நிகழ்கிறது. அதுமட்டுமல்ல, மறுநாள் முழுக்க தலைவலி, நினைவு குறைதல், களைப்பு, டென்ஷன் என நிறையப் பிரச்னைகள் ஏற்பட்டு, அன்றாட வேலைகள் பாதித்து விடும். பலர், சாலை விபத்துகளில் சிக்கவும் நேரிடுகிறது.''



• சீப்ரப்'கருவியை இயக்குகிறார் டாக்டர் என். ராமகிருஷ்ணன்

**இதற்கு என்ன சிகிச்சை?**

* குறட்டைப் பிரச்னை, தூக்கக்



''இந்தப் படத்தைப் பாத்துட்டு வெளியே வந்தவங்க எல்லாம் 'ஒரு தடவை பார்க்கலாம்... ரெண்டு தடவை பார்க்கலாம்'னு சொன்னாங்க. நீங்க மட்டும் ஐந்து தடவை பார்க்கலாம்னு சொல்றீங்களே ஏன்?''

''அப்பவாவது படத்துல கதையைக் கண்டுபிடிக்க முடியுமானுதான்.''

- வீ. விஷ்ணுகுமார்




''இதோ பாருப்பா... அடுத்த மாசம் 10ந்தேதி உங்க வீட்ல காது குத்து விழா வச்சிருக்கலாம். அதுக்காக அன்னைக்கு வெளிவர்ற எங்க பத்திரிகையோட அஞ்சுகிலோ உளுத்தம் பருப்பு, 4 கிலோ துவரம் பருப்பு, 2 கிலோ கடலைப் பருப்பு, 2 கிலோ கோதுமை மாவு, 2 கிலோ சர்க்கரை எல்லாம் தர முடியுமானு கேட்கறது கொஞ்சங்கூட சரியில்ல!''

- வே. ஆறுமுகம்

கோளாறு என்று எங்களிடம் வந்தவுடனேயே, 'தூக்கம்' பற்றிய பல கேள்விகளைக் கேட்போம். அதிலேயே பாதி பிரச்னை புரிந்து விடும்.

* பிறகு, காது, மூக்கு, தொண்டை நிபுணரிடம் பரிசோதனை செய்யச் சொல்வோம். சளி, சைனஸ், சுவாசப் பிரச்னை, செப்டம் டீவியேஷன், மூக்குத் துவாரத்தில் பிரச்னை, டான்ஸில்ஸ் என்லார்ஜ்மெண்ட், அடினாயிட் என்லார்ஜ்மெண்ட் என ஏதும் பிரச்னைகள் இருக்கிறதா என்று ஆராய்வோம். இருப்பின், அதற்கு ஏற்ப சிகிச்சை தரப்படும்.

* 'ஓரல் டிவைஸஸ்' எனப்படும் குறட்டையை நிறுத்தும் கருவிகள் வெளிநாடுகளில் பிரபலமாக உள்ளன. பல் செட்டு போல இதை வாயில் பொருத்திக் கொண்டால் குறட்டை விடுவது நிற்கும். சமீபத்திய கண்டுபிடிப்பு இது.

* நவீன முறையில் சர்ஜரி செய்து, காற்றுப் பாதையைப் பெரிதாக்கி குறட்டை வராமல் தடுக்க முடியும்.

* இதையெல்லாம் விட அமெரிக்க தொழில் நுட்பம் ஒன்று, தற்போது மிகப் பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. சிப்ஏப் (CPAP - Continuous positive airway pressure) என்ற இந்தக் கருவி மூலம் ஸ்லீப் ஏப்னியாவுக்கு முடிவே கட்டி விடலாம். தினமும் தூங்கப் போகும் முன் இந்தக் கருவியில் உள்ள மாஸ்கைப் பொருத்திக் கொண்டால், பாஸிடிவ் பிரஷர் மூலம் காற்று தடையில்லாமல், மூச்சுக் குழாய்க்குள் பாயும். இதனால் நோயாளிகள் ஆழ்ந்து தூங்கி விடுவார்கள். குறட்டைத் தொல்லையோ, மூச்சடைத்து பயந்து அலறுவதோ சுத்தமாக இருக்காது. ஓய்வான தூக்கம் என்பதால், மறுநாள் புத்துணர்வாக இருக்கும்.

''மிகவும் நம்பகமான, அதே சமயம் நிரந்தரத் தீர்வு தரும் சிப்-ஏப்பின் விலை சற்று அதிகம்தான். ரூபாய் முப்பதாயிரத்திலிருந்து ஒரு லட்சம் வரை. ஆனால் ஸ்லீப் ஏப்னியாவால் பாதிக்கப்பட்டு, உயர் ரத்த அழுத்தம், பக்கவாதம், இருதய நோய், தூக்கமின்மை என பெரிய அளவில் அவதிப்படுவதைத் தடுக்கக் கூடியது என்பதால், நியாயமான விலைதான்!

- மினி

படம் : ஸ்ரீஹரி



### போஸ்ட் கார்ட் கதை

# தாகம்!

அத்தி பூத்தாற்போல் மழை பெய்து கொண்டிருந்தது. மழையின் தீவிரம் அதிகரித்துக் கொண்டே வர, அடுத்த இரண்டு மணி நேரத்தில் கணுக்கால் அளவு தண்ணீர். திடீரென்று தண்ணீர் லாரி வரவும் மக்கள் குடங்களுடன் அலைமோதினர். அக்கூட்டத்தில் இருந்த ஏழு வயசு பரசு, "ஏம்மா, இவ்வளவு நேரம் எவ்வளவு தண்ணி வந்திச்சு, அதைப் பிடிக்காமல் இந்த இரண்டு குடத் துக்கு இப்படிச் சண்டை போடறியே?" என்றான். எதுவும் சொல்ல முடியவில்லை. அம்மாவால் மட்டுமல்ல, எல்லோ ராலும்தான்.

- சு. கௌரி

# நீங்கள் கேட்டவை – தராசு

● க. பொன்னிலா சேகர்,
பெங்களூர் - 53

? கல்கியின் வயது என்ன...?

! சிறந்த ஆலோசனை சொல்வதில் அறுபது. அல்லாதவற்றைத் தட்டிக் கேட்பதில் நாற்பது. ரசிக்கத் தக்கவற்றில், லயிப்பதில் இருபது. எந்த உள்நோக்கமும் இல்லாததில் ஒன்று!

● ஆர்.எம்.இ.மலை,
அக்ரஹாரம் அஞ்சல்

? முதல்வர் ஜெ.வுக்குத் திரையுலகினர் பாராட்டு நடத்தியதற்கும் அதே திரையுலகினர் கருணாநிதிக்குப் பாராட்டு விழா நடத்தியதற்கும் என்ன வித்தியாசம்...?

! முதல்வர்தான் வித்தியாசம்.

● ஆர்.கார்த்திக் அமர்த்யா,
மயிலாடுதுறை

? "நான் பதுங்குவது ஒதுங்க அல்ல; பாய்வதற்கு" என்கிறாரே விஜய காந்த்?

! அதேபோல, 'பாய்ச்சல் காட்டுவதும் தாக்குவதற்காக அல்ல' என்று சொல்லலாம்... தாக்கினாலும் காயப்படுத்த அல்ல எனலாம்...!

• பதுங்கல் பேச்சு!

● க.மோ.சிவா, கந்திருப்பம் ★

? ராமதாஸ் - திருமாவளவன் உறவு நீடிக்குமா?

! உறவு நீடிக்கலாம், நீடிக்காமலும் போகலாம். ஆனால் மிரட்டல் போக்கு நீடிக்கும் - பால் தாக்கரேயைப் பார்த்துப் பாடம் கற்றாலொழிய. அரசியல் கொள்கை எவ்வளவு முக்கியமோ அவ்வளவுக்கு அணுகுமுறையும் முக்கியம்.

● லெ.நா. சிவகுமார்,
சென்னை - 33

? உமாபாரதி தரப்பில் ஏதாவது நியாயம் இருக்கிறதா...?

! அவர் தரப்பில் ஓரளவு நியாயம் இருப்பினும் அவர் நடந்து கொள்ளும் விதத்தில் நியாயம் சிறிதும் இல்லை.



• பாடமும்...

நிம்மதியின்

● க. சபரீஷ்,
சென்னை - 33

? ரஜினி உள்பட திரையுலகினரின் ஜால்ரா கோஷம் உங்கள் காதில் விழுந்ததா..?

! நன்மை செய்ததற்காக நன்றி சொன்னார்கள். என்ன, நடிகர்கள் என்பதால் உணர்ச்சிவசப்பட்டு கொஞ்சம் ஓவராக நடித்தும் காட்டினார்கள். அவ்வளவுதான்.

● முகவை முத்துசாமி, தொண்டி

? தராசை நிறுத்திப் பார்க்கும் விஷயம் எது?

! பதில்கள்.

● எம். ராஜேந்திரன், லால்குடி

? சென்னை மடாதிபதி ஸ்ரீ பிரசன்ன வெங்கடாசலபதி சதுர்வேதி, பிரேமானந்தாவுக்கு அண்ணனாக இருப்பார் போலிருக்கிறதே...?

! அவர் மீதுள்ள குற்றச்சாட்டுகள் ஒரு புறமிருக்கட்டும்... யார் சாமி, யார் ஆசாமி என்று பகுத்துணர்ந்து பார்த்து பக்தி செலுத்தாதவரை, மக்களை ஏமாற்ற ஆட்கள் முளைத்துக் கொண்டுதான் இருப்பார்கள். ஒரு பிரேமானந்தா மறக்கப்படுவதற்கு முன்னதாகவே, சிந்திக்காமல் சதுர்வேதியை நம்பியது யார் குற்றம்...?



• ... பாதையும்!

● எம். ஹரிஹரன், பழனி - 1

? உமாபாரதியின் நீக்கத்தை, பாஞ்சாலியின் துகிலுரிதல் நிகழ்ச்சிக்கு ஒப்பீடு செய்து காங்கிரஸ் தரப்பில் விமர்சனம் செய்திருப்பது சரியா?

! கௌரவர்கள் இழைத்ததைக் காட்டிலும் அதிகக் கொடூரம்!

● எஸ்.பேச்சி, வெள்ளாரம்

? புத்தகம் படிப்பதை விட, தொலைக்காட்சியை மக்கள் அதிகம் விரும்புவதாக ஓர் ஆய்வு கூறுவது உண்மை தானா...?

! இதற்கொரு ஆய்வும், அந்த ஆய்வு கூறுவது உண்மையா என்று இன்னொரு ஆய்வும் எதற்கம்மா? நம் வீடுகளில்



• உபவாஸ உதாரணம்

அக்கம் - பக்கத்தில் பார்வையைச் செலுத்தினாலே போதுமே - முட்டாள் பெட்டியின் (idiot box) செல்வாக்கை உணர.

● கே.வி.ராமன், சென்னை - 73

? இந்திய கிரிக்கெட் வாரியம் தொழில் செய்கிறது எனக் கருதி, வருமான வரி போட நடவடிக்கை யாமே...?

! நடவடிக்கை இன்னும் எடுக்கப்படவில்லை. ஆனால் கிரிக்கெட்,

# பிலாசம் என்ன...?



• பாராட்டில்....



• ... பாரபட்சம்

கோடிக் கணக்கில் பணம் புரளும் முழு நேரத் தொழிலாகிவிட்ட நிலையில், விளையாட்டு என்ற அந்தஸ்தில் அதை வைத்து, கிரிக்கெட் கட்டுப்பாடு நிறுவனத்துக்கு வருமான வரி விதிக்காமல் இருப்பது கேள்விக்கு உள்ளாகியிருக்கிறது.

● ச.ஆ. கேசவன், இனாம் மணியாச்சி

*? நிம்மதியின் சரியான விலாசம் கூறமுடியுமா?*

! 'மனசாட்சி விலாஸ்',
எளிமையான் வீதி,
இறையுணர்வுபுரம்,
ஆனந்த மாநகர்.

● ஆர்.ஜி.ஏ. ராமன், திசையன்விளை

*? 17.12.2000 கல்கி இதழில், இதே தராசு பதில் பகுதியில், 'ஜயேந்திரர் ஆன்மிகம் பேசினால் ஏற்கலாம்; அரசியல் பேசினால் எதிர்க்கலாம்... தப்பில்லை' என்று குறிப்பிட்டிருந்தீர்கள். இன்றைய நிலையில், உங்கள் வார்த்தைகளின் தீர்க்கதரிசனத்துக்காக வாயில் சர்க்கரை அள்ளிப் போடச் சம்மதிப்பீர்களா...?*

! நிச்சயம் மாட்டேன். நடந்திருப்பது எதுவும் இனிப்பானதோ உவப்பானதோ அல்ல.

● மோகனசந்திரன், சிவமலை ❒

*? ஆன்மிகவாதிகளிடம் அசுத்த எண்ணம், அசுர எண்ணம் தலை தூக்குமா...?*

! காஞ்சி மகா பெரியவர், எளிய உணவே சாப்பிட வேண்டும் என்பதற்காக, நெல் பொரியில் மோர் விட்டுச் சாப்பிடுவது வழக்கம். இதையொட்டி, 'அவர் நெல் பொரியை விரும்பிச் சாப்பிடுவார்' என்று ஏதோ ஒரு பத்திரிகையில் எழுதப்போக, தமக்கு அப்படி ஒரு விருப்பம் பொரி மீது இருப்பதாக உலகை நினைக்க வைத்துவிட்டோமே என்று வருந்தி உபவாஸம் இருந்தாராம். மகாபெரியவரைப் போல் எல்லா ஆன்மிகவாதிகளும் இருந்து விடுகிறார்களா...?



★ நியாயத் தேடல்!

● மஞ்சுதேவன், மும்பை

*? நேற்றுவரை தமிழகத்தில் சில பகுதிகளில் தண்ணீர் இல்லாத கஷ்டம்; இன்று வெள்ளத்தினால் தண்ணீரினால் கஷ்டம்... ஒப்பிடுக?*

! இரண்டுக்குமே காரணம் இயற்கையின் சீற்றம் கால் பங்கு; அரசின் செயல்திறனின்மை முக்கால் பங்கு!

● திருச்சிற்றம்பலம் சுரேஷ், திருக்கண்டேஸ்வரம்

*? தமிழக கவர்னர்...?*

! அரசியல்வாதிகள் கையில் மத்தளம். நடவடிக்கை எடுக்காவிட்டால் ரப்பர் ஸ்டாம்பு; நடவடிக்கை எடுத்தால் அதிகார துஷ்பிரயோகம்!

● எஸ்.இராமலிங்கம், ஆத்தூர்

*? அரசியல், சரி - அதென்ன ஆரோக்கியமான அரசியல்...?*

! நம் நாட்டில் இப்போது காணக் கிடைக்காதது.

● க.நா. இராமேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

*? நடிகைகள் சினிமாவில் நடிப்பது புகழுக்காகவா? பணத்துக்காகவா? கலைச் சேவைக்காகவா...?*

! சமீபத்தில் செய்திகளைப் பார்க்க, பெரும்பாலும் வற்புறுத்தலுக்காக என்றே தோன்றுகிறது.

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
மோகன சந்திரன்,
தெற்கு தெரு,
சிலமலை அஞ்சல்
தேனி - 625 528

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
க.மோ. சிவா,
கந்திகுப்பம் அஞ்சல்,
கிருஷ்ணகிரி - 635 108.

# வாசகர் குமுறல்!

# மணி மருந்து!

● நடக்கக் கூடாதது நடந்து விட்டது நிதர்சனம். ஆசிரியரின் அன்பான அணுகுமுறை, அசத்தலாகவும் அதே சமயம் ஆக்கபூர்வமாகவும் இருந்தது. ஆஸ்திக அன்பர்களுக்கு ஆசிரியர் பக்கம் இதம் தரும் மருந்து. பாராட்டு!

- ஆங்கரை ஆனந்

● யாராவது நல்ல வார்த்தை சொல்லிட மாட்டார்களா என ஏங்கிய எனக்கு, ஆசிரியரின் மணியான வார்த்தைகள் புதுத் தெம்பூட்டின!

சிம்மவாஹினி, வியாசர் காலனி

● 'அதிர்ச்சி உண்டு! அழிவு இல்லை!' ஆசிரியர் பக்கம் உணர்ச்சி பூர்வமாக அமைந்தது. ஆனால் ஜயேந்திரர் கைது விஷயத்தில் அரசியல் தலையீடு நுழைவதுதான் மிகவும் வேதனை அளிக்கிறது!

- வே. முருகேசன், சென்னை - 88

● சுதந்திர மதமான இந்து மதம், எந்தவொரு குறிப்பிட்ட நபராலும் வளர்ந்ததோ, அல்லது தாழ்ந்ததோ இல்லை. அம்மன் அருள்பாலிக்கும் காஞ்சி பீடமும் என்றும் உயர்வானது, உறுதியானது. தடைகளைத் தகர்த்தெறியும் வல்லமை அதற்கு உண்டு.

- ஆர். நாகராஜன், சென்னை - 117

● 'நான் நிரபராதி என ஜயேந்திரர் கூறுகிறார். இருக்கலாம்' என நீங்கள் எழுதி உள்ளீர்கள், இருக்கலாம் என்ன? உண்மையில் அவர் நிரபராதியே. எனக்கு மட்டும் அல்ல, கோடானு கோடி பேருக்கு நம்பிக்கை இருக்கிறது.

- ச.டேவிட், சென்னை - 81

● லட்சோப லட்சம் ஆஸ்திக அன்பர்களின் மனத்தில் ஏற்பட்ட ஆறாத புண்ணுக்கு, ஆறுதலாக அமைந்திருந்தது. தாங்கள் குறிப்பிட்டது போல் நாம் அனைவரும் பீடத்துக்கு உண்டான மரியாதையையும், மதிப்பையும் அமைதியாகக் காக்க, அந்த காமாட்சியை வேண்டுகிறேன்.

பி.கு: படித்து முடித்ததும் கண்ணில் நீர் துளித்தது.

- சியாமளா ரங்கநாதன்

● ஆசிரியர் பக்கத்தில் உள்ள ஒரு வரியை என்னால் ஜீரணிக்க முடியவில்லை. ஜயேந்திரர் எந்த விதமாக நடந்து கொண்டு பிடி அவலை அவர்களுக்கு அளித்தார்? விளக்க வேண்டுகிறேன்.

- எஸ். வெங்கட்ராமன், சென்னை - 32

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

**4**

**ஏழாம் பாகம்**

பகவானுடைய நாம வைபவத்தை உணர்ந்து, திருநாமங்களை யார் உச்சரிக்கிறார்களோ, அவர்களுக்கு யக்ஞம் பண்ணிய பலன் கிடைக்கும். பெரிய பெரிய மஹா யக்ஞங்கள் பண்ணிய பலன் கிடைத்துப் போய்விடுகிறது!

பெரிய பெரிய மஹா யக்ஞம் பண்ணிய வம்சத்தில் வந்தவர்கள் இன்றும் இருக்கிறார்கள். 'எங்க தாத்தாவெல்லாம் யக்ஞம் பண்ணியவர்கள்' என்று சொல்லுவார்கள் அவர்கள். அப்படிப்பட்ட யக்ஞம் பண்ண முடியவில்லையே என்று கவலைப்பட வேண்டாம். பகவானுடைய திருநாமத்தைச் சொன்னாலே போதும். 'சந்தோஷமாக, ஆனந்தமாகச் சொல்லுங்கள் அவன் திருநாமத்தை...' என்று வேதமே நமக்கு விசேஷமாக எடுத்துச் சொல்கிறது. பகவான் நாம சங்கீர்த்தனம்தான் சிறந்த மார்க்கம். இந்தக் கலியுகத்திலே வாழக்கூடிய நம்மைப் போன்றவர்களுக்கு, கலியே சாது என்று சொல்லப்பட்டிருக்கிறது!

ஏன்...? கலிக்குப் பல தோஷங்கள் அல்லவா சொல்லப்பட்டிருக்கின்றன? ஆனால், கலியில் பிறந்த நமக்குச் சுலபமான மார்க்கம் சொல்லப்பட்டிருப்பதனாலே - நாம சங்கீர்த்தன மார்க்கம் காட்டித் தரப்படுவதனாலே - கலியே சாது என்று கொண்டாடப்படுகிறது!

கலியுகம் பிறந்துவிட்டது என்பதை எப்படித் தெரிந்து கொள்ளலாம்...? பவிஷ்யத் புராணத்தில் சொல்கிறபோது... கலியுடைய கோலாகலத்தினாலே பலவித கிருத்யங்கள் நடக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அது மட்டுமல்ல... அந்த கிருத்யங்களைப் பார்த்துக் கொண்டு மகான்கள் சாந்தமாகவே இருப்பார்கள் என்கிறது பவிஷ்யத் புராணம்! சண்டை போட மாட்டார்கள் மகான்கள். 'இப்படி இருக்கிறதே!' என்று காலத்தை நிந்திக்க மாட்டார்கள்.

சாஸ்திரமே சொல்கிறது: 'கலியுகத்திலே ஒருவன் பெரிய தர்மத்தை அனுஷ்டிக்கிறேன் என்று உட்கார்ந்து பண்ண முடியாது'. பண்ண வேண்டும் என்று ஆரம்பித்தால் அந்த யுகமே அவனைத் தடுக்கும்! 'இவன் நமக்குத் துரோகி! நம் யுகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிற இவன், நாம் நினைக்கிறபடி நடக்காமல், வேறொரு தர்மத்தைப் பண்ணுகிறானே' என்று பலவாறு அவனைத் துன்புறுத்துமாம் கலி!
அவ்வாறிருக்க, அவன் நல்லதை எப்படிப் பண்ண முடியும்...?
இதையும் மீறி நல்லதை ஒருத்தர் பண்ணினால், கலி அவரிடம் தோற்றுப் போய்விடுகிறது!

'கண்டோம் கண்டோம் கண்டோம்;
கண்ணுக்கு இனியன கண்டோம்;
தொண்டீர் எல்லீரும் வாரீர்;
தொழுது தொழுது நின்று ஆர்த்தும்;
வண்டு ஆர் தண் அம் துழாயான்
மாதவன் பூதங்கள் மண்மேல்
பண்-தான் பாடி நின்று ஆடி
பரந்து திரிகின்றனவே.

திரியும் கலியுகம் நீங்கி
தேவர்கள் தாமும் புகுந்து
பெரிய கிதயுகம் பற்றி...
பேரின்ப வெள்ளம்
பெருக...'

----

- இது நம்மாழ்வார் வாக்கு.



# குறையொன்றுமில்லை

பக்தர்கள் எங்கே திருநாமம் ஜபிக்கிறார்களோ, அந்த இடத்திலே கலி புருஷன் வர முடியாது. 'க்ருஷ்ணா!' என்று சொன்னால், ஓடியே போய்விடுவான். அவ்வளவு பயம் கலிக்கு!

தசம ஸ்கந்தத்திலே சொல்கிறபோது 'க்ருஷ்ணனுடைய சரித்திரம் இருக்கிறதே' - அது கலி கல்மஷத்தைப் போக்கக் கூடியது... க்ருஷ்ணா என்று சொல்கிறபோதே கலிக்கு நடுக்கம்' என்று சொல்லியிருக்கிறது.

க்ருஷ்ணன் பூலோகத்திலே இருந்து தன் திருவடியை எடுத்துக்கொண்டு, வைகுண்டத்துக்கு ஏகிய பிற்பாடுதான் கலி பிரவேசம். அது வரைக்கும் கலி நுழையவே இல்லை.

கலியுகத்திலே சுலபமான மார்க்கம் நாம ஸங்கீர்த்தனம்தான்.

'ஹரேர் நாமைவ மம ஜீவனம்' என்று இருக்க வேண்டியதுதான்.

ஹரி நாமத்துக்கு அவ்வளவு மஹிமை! பாபங்களை ஹரிப்பவன் ஹரி ஆனதனாலே, அப்படிப்பட்ட ஹரியை தியானம் பண்ணி, யாரொருவர் அவன் திருநாமத்தைச் சொல்கிறார்களோ, அவர்களுக்குக் கலியினுடைய கொடுமை நீங்கும்; கலி புருஷன் அவர்களை நெருங்க மாட்டான் என்று சொல்லப்படுகிறது.

சுவாமி தேசிகன் ரொம்ப அழகாகச் சொல்லியிருக்கிறார்:

கலியிலே, 'உட்கார்ந்து சஹஸ்ரநாமம் சொல்லு' என்றால், அதைச் சொல்லக்கூட அரைமணி அவகாசம் இல்லை. சில பேருக்கு அரை மணியே போதாது! கூடுதலான நேரம் வேண்டும். ஏனென்றால், நல்ல நெட்டுரு இல்லாவிட்டால், அதே இடத்துக்குத் திருப்பித் திருப்பி வந்து, சொன்னதையே சொல்லிக் கொண்டிருப்பார்கள். கோஷ்டியிலே சொல்லி வழக்கமாகிவிட்ட சில பேருக்குத் தனியாகச் சொல்ல முடியாது!

சஹஸ்ரநாமமே இந்தப் பாடு படுத்துகிறது என்றால், வேதம்...? வேதமெல்லாம் மஹா சமுத்திரம்! எவ்வளவு கஷ்டம் பாருங்கள், அதை அத்யயனம் பண்ணுவது! அக்ஷர ராசிகளின் கூட்டம் வேதம்!

சஹஸ்ரநாமத்தைப் பாராயணம் பண்ணி கலியினுடைய கொடுமையை நீக்கிக் கொள்ளலாம் எல்லாரும்... பாராயணம் பண்ணினால் கலி கிட்டே வரமாட்டான். சுவாமி தேசிகன் சொல்கிறார்...: "தனியே உட்கார்ந்து அரை மணி சொல்வதானால் கஷ்டம். நீ எந்தக் காரியம் பண்ணுகிறாயோ, அந்தக் காரியத்தினூடே பகவான் திருநாமத்தைச் சொல்லு..." என்கிறார்.

"உச்சிஷ்டன்னு சிந்தய ஹரி' என்று சொல்லியிருக்கிறது:

பிராதஹ் காலத்திலே எழுந்திருக்கிறபோதே 'ஹரி ஹரி:' என்று ஏழு தடவை சொல்ல வேண்டும்.

'பேரரவம் கேட்டிலையோ!' என்று ஆண்டாள் கேட்கிறாளே... அந்த மாதிரி 'ஹரி' என்று உரக்கச் சொல்ல வேண்டும். அரவம் என்றால் சத்தம். பேரரவம் என்றால் பெருங்கூச்சல்!

"ஹரி" என்று மெதுவாகச் சொல்லாதீர்கள்... பெருத்த குரலில், பெரிதாகச் சொல்லுங்கள்.

ஏனென்றால், இவர் இப்படி உரக்கச் சொல்வதனாலேதான் உலகத்தில் எல்லோருக்கும் உபகாரம். இவர் "ஹரி ஹரி!" என்று கூப்பிடுவதைக் கேட்டு மற்றவர்கள் எழுந்திருப்பார்கள் அல்லவா...? அவர்கள் காதிலும் அந்தச் சத்தம் விழும் அல்லவா? அதற்காகத்தான் பகவான் நாமாவை உரக்கச் சொல்லுங்கள் என்றது.

எம் பெருமானின் திருநாமத்தைக் கேட்கிறபோதெல்லாம், ஹ்ருதயத்திலே இருக்கிற தாபத்தை அது போக்கடித்து விடும்.

ஆகவே, எழுந்திருக்கிறபோதே 'ஹரி ஹரி' என்று ஏழு தடவை சொல்ல வேண்டும்.

வெளியே கிளம்புகிறபோது 'கேசவாய நம:' என்று சொல்ல வேண்டும். 'கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ!' என்றாள் ஆண்டாள்.

'கெடுமிடர் ஆயவெல்லாம் கேசவா வென்ன...' - இடர் எல்லாம் கெடும்.

காரியத்தில் தடை, எதை எடுத்தாலும்

"காஸ் சிலிண்டர் விலை உயர்வு பற்றி தலைவர்கிட்ட கேட்டியா?"

"கேட்டேனே! சிலிண்டர் டெலிவரி பண்ற பையனுக்கு டிப்சை நிறுத்தினா விலை உயர்வு தெரியாதுன்னு சொல்றார்!"

- அம்பை தேவா



சரியாக நடக்க மாட்டேனென்கிறது... வெளியே கிளம்புகிறபோது 'கேசவாய நம:' என்று தியானம் பண்ணினால் இடர்கள் கெட்டு ஓடும்!

தங்கம் போல் ஜ்வலிக்கக் கூடியவன்; சக்ராயுதத்தைத் தரிக்கக்கூடியவன் கேசவன். ஊர்த்வ புண்டரத்தை தரிக்கிற போதுகூட, எம் பெருமானுடைய திருநாமத்தைச் சொல்லி நெற்றியிலே ஸ்ரீசூர்ணம் இட்டுக் கொள்ள வேண்டும்.

கேசவனை நெற்றியிலே வைத்து தியானம் பண்ண வேண்டும். மார்கழி மாதத்துக்கு அதிஷ்டான தேவதை கேசவன் - அந்த மாதத்துக்கு உரிய தேவதை.

கேசி என்ற அசுரன் வந்தான், குதிரை உருவிலே... அவன் வாய்க்குள் தன் கையை, புஜத்தைக் கொடுத்து சம்ஹரித்தான் பகவான்.

குதிரையினுடைய வாயைப் பிளந்து கிழித்துப் போட்டான் அவன். அப்படிப்பட்ட கேசியை சம்ஹாரம் பண்ணிய கேசவனை தியானம் பண்ணி விட்டுக் கிளம்பினால், திக்விஜயம் பண்ணிக் கொண்டு வரலாம்! எடுத்த காரியங்களெல்லாம் நல்ல முறையிலே நடைபெற, கேசவனை தியானம் பண்ணிக்கொண்டு வெளியே செல்லுங்கள்.

அதே மாதிரி, 'உஞ்சம் சிந்தய கோவிந்தம்'. கோவிந்தனை மனசார நினைக்க வேண்டும், சாப்பிடுகிறபோது.

'கோவிந்தாய நம:' என்று சொல்லி யார் சாப்பிடுகிறார்களோ, அவர்களுக்கு அன்னம் நன்றாக ஜெரித்து, சரீரத்தில் ஆரோக்கியம் ஏற்படும்.

கோவிந்த சப்தத்துக்குப் பல பொருள் உண்டு. பத்து அவதாரமும் கோவிந்த சப்தத்திலேயே வந்துவிடுகிறது.

மத்ஸ்யாவதாரம் பண்ணி பரமாத்மா வேதங்களையெல்லாம் மீட்டான். அப்படிப்பட்ட வேதங்களை - சப்த ராசியை ரக்ஷித்ததனாலே, மத்ஸ்யாவதாரத்துக்கு 'கோவிந்தன்' என்று பெயர்.

'கோ' என்ற சப்தத்துக்குப் பர்வதம் என்றும் பெயரானதனாலே, கூர்மாவதாரம் பண்ணி பர்வதத்தைத் தாங்கிய அவனுக்கு கோவிந்தன் என்று பெயர். அது மாத்திரமல்ல, கோ என்ற சப்தத்துக்கு பூமி என்றும் அர்த்தம். பூமியை வராஹ அவதாரம் உத்தாரணம் பண்ணியதாலே, வராஹ அவதாரத்துக்கு கோவிந்தன் என்று பெயர்.

பிரும்மாதி தேவதைகளெல்லாம் தங்கள் வாக் பிரவாஹத்தினாலே பகவானை நரசிம்ஹ அவதாரத்திலே பிரார்த்தனை பண்ணினார்கள். அத்தனை வாக்குக்கும், உக்ர ரூபியான அவன் பொருளாக விளங்கினதனாலே, நரசிம்ஹ அவதாரத்துக்கும் கோவிந்தன் என்கிற திருநாமம்.

அதே மாதிரி, மூன்று அடி மண் கேட்டு, வாமன அவதாரம் பண்ணி திரிவிக்கிரமனாக வளர்ந்து - குறளுருவாய் வந்து சமஸ்தத்தையும் அளந்தவன், பூமியைத் தன் வயப்படுத்திக் கொண்டதனாலே, கோவிந்தன் என்று வாமனனுக்குப் பெயர். கோவிந்த சப்தத்தினாலே பரசுராம அவதாரமும் சொல்லப்படுகிறது.

கோ என்ற சப்தத்துக்கு அஸ்திர சஸ்திரங்கள் என்றும் அர்த்தம். அஸ்திர சஸ்திரங்கள் அத்தனையையும் - ஐந்நூறு அஸ்திரங்களையும் பகவான் விச்வாமித்திரரிடமிருந்து பெற்றான். விச்வாமித்ரர் தான் கற்ற அஸ்திர சஸ்திரங்கள் அனைத்தையும், ராமார்ப்பணம் பண்ணினார். விச்வாமித்ரரிடமிருந்து பெற்றதனால், கோவிந்தன் என்று ராமாவதாரத்துக்குப் பெயர்.

கோ என்று பசுக்களுக்குப் பெயர். கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து ஆநிரை காத்து, ஆயர்பாடியில் பசுக்களை மேய்த்ததனாலே, வாசுதேவன் கிருஷ்ணனுக்கு கோவிந்தன் என்று பெயர்.

கலியிலே தர்மத்தைப் பிரதிஷ்டாபனம் பண்ணப் போகிற கல்கி அவதாரத்துக்கும், கோவிந்தன் என்று பெயர்!

(வளரும்)



# அட்டகாசம்

ஒருவர் ஹீரோ, இரண்டாவது ஆள் வில்லன். அநேகமாய் டுயல் ரோல் படங்களின் சூத்திரம் இதுதான். டுயட் பாடிய களைப்பில் ஹீரோ கொஞ்சம் அசந்துவிட்டால் முடிந்தது! மிதிவண்டி இடைவெளியில் மின்னல்போல் நுழைந்து, ஆள்மாறாட்டம் செய்து விடுவார் வில்லன். இன்னும் வில்லன் அண்ணாச்சியின் அத்தனை ஐபிசி குற்றங்களுக்கும் மாண்புமிகு ஹீரோ ஜவாப்தாரி ஆகவேண்டி வரும். 'எல்லாம் இந்தப் பாழாய்ப்போன தோற்ற ஒற்றுமையால் வந்த வில்லங்கமப்பா!' என ரசிகர்கள் உச்சுக்கொட்ட ஆரம்பிக்கும்போது, பிறப்பு ரகசியம் உடைந்து இரட்டைகள் "அண்ணா!" "தம்பி...!" என்று பாச டெசிபல் கூவலோடு கட்டிக்கொள்வார்கள்.

அட்டகாசத்திலும் இந்த அட்டகாசங்கள் எல்லாம் உண்டு. ஆனால் காட்சிகள் அத்தனையும் புத்தம் புதுசு. பாத்திரங்களின் குணாதிசயங்கள், லாஜிக் உதைக்காத அல்ட்ரா புதுசு. உதாரணத்துக்கு அஜித் இரட்டையர்களின் அம்மா பாத்திரம். ஃப்ளாஷ்-பேக் வில்லனின் கத்திக்கு கணவரைப் பறிகொடுக்கும் இவர், "இவன்தாப்பா உங்க அப்பாவைக் துடிக்கத் துடிக்கக் கொன்னவன். இவனைப் பழி வாங்கினாத்தான் நீங்க என்னோட பிள்ளைகள்!" என்று வில்லனின் போட்டோவைக் காட்டி வளர்க்காமல், மீண்டும் வில்லனை சந்திக்கும் சுஜாதா, அவரைத் தமது வீட்டுக்குக் கூப்பிட்டு, சாப்பாடு போட்டு, 'என் பிள்ளைகளால் உங்களுக்கு எந்த ஆபத்தும் வராது' என்று யதார்த்தமாகக் கெஞ்சுகிறார்.

தாதா அஜித்தோ, தமது இரட்டைச் சகோதரனை மற்றொரு வில்லனிடம் பலி ஆடாக அனுப்பி வைக்கிறார். 'மறுத்தால் என்னைத் தத்துக் கொடுத்த உனது அம்மாவைக் கொன்னுடுவேன்' என மிரட்டுகிறார். கெஞ்சும் சகோதரனிடம், "என் மூஞ்சியை வெச்சிகிட்டு கெஞ்சாதே" என்று சீறுகிறார். ஆக ஒரு சில காட்சிகளிலேயே பாத்திரங்களை நிறுவி, கதையை புதிய களத்தில் வேகமாக நகர்த்தும் சரணின் திரைக்கதையில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஹைக்கூத்தனம் ஹைலைட்டாக ஜொலிக்கிறது. போனஸாக ஆக்ஷன் காட்சிகளில் கூட அபாரமான நகைச்சுவை ஆட்சி.

அஜித்தின் முகம் காமெடி, காதல், ஆக்ஷன் உள்ளிட்ட அனைத்து உணர்ச்சிகளையும் ஈடுபாட்டுடன் பிரதிபலிக்கத் தொடங்கியிருக்கிறது. ஆட்டம் போடுவதில் கூட ஒரு எட்டு வேகம் கூட்டியிருக்கிறார். மீண்டும் வந்திருக்கும் வில்லன் பாபு ஆண்டனியிடம் வேகம், துளிக்கூடக் குறையாதது ஆச்சர்யம்! வழக்கமான அழகுதேவதை என்ற நிலையிலிருந்து, பூஜாவுக்கு இன்னும் கொஞ்சம் பதவி உயர்வு கொடுத்திருக்கலாம்.

பாடல் காட்சிகளைப் படமாக்கியிருக்கும் விதத்தில், அடிப்படையில் தாமொரு ஓவியர் என்பதை நிரூபிக்கிறார் சரண். குறிப்பாக அந்த 'நச்சென்று... இச்சென்று' பாடல். அஜித்துக்கு அமர்க்களமான திருப்புமுனை அட்டகாசம்!

- விஷுவல்தாசன்

● அபவ் ஆவரெஜ்

# மன்மதன் கிடைக்குமா?



• காதர் முகைதீன்



• அருண்



• செல்வராஜ்

தீபாவளிக்கு வெளிவந்த படங்கள் சக்கைப்போடு போட்டுக் கொண்டிருக்கும் நேரமிது. இந்த நேரத்தில் தமிழக சட்டசபையில் "திருட்டு விசிடி குற்றவாளிகள் மீது குண்டர் சட்டம் பாயும் - ஜாமீனில் வரவே முடியாது. ஓராண்டு ஜெயில் உறுதி" என்று தடாலடி தண்டனைகளுடன் மசோதா நிறைவேற்றப்பட்டுள்ளது. இதன் காரணமாக திருட்டு விசிடி தர்பாரின் வேகம் குறைந்திருக்கிறதா? - உண்மையிலேயே இக்கட்டுப்பாடுகள் அவர்களை மிரளச் செய்துள்ளனவா --இல்லை, வியாபாரம் காதும் காதும் வைத்தாற் போல் ஓசையின்றி நடந்து வருகிறதா? என்று தெரிந்து கொள்ள, பர்மா பஜார் வியாபாரிகள் சிலரிடம் பேசினோம்.

தமிழக அரசு இத்தகைய அறிவிப்புகளை வெளியிட்ட நாளிலிருந்தே தங்களது 215 கடைகளையும் மூடிவிட்டதாகவும், முற்றிலுமாக விசிடி விற்பனையை நிறுத்தி வைத்திருப்பதாகவும் கூறுகின்றனர். உண்மையில் திரைப்படத் துறையினர் புதிய திரைப்பட விசிடிகள் விற்பனை செய்பவர்கள் மீதுதான் நடவடிக்கை எடுக்கச் சொன்னார்கள், ஆனால் அறிவிப்பு வெளியாவதற்கு முன்னர் கொள்முதல் செய்யப்பட்ட பழைய படங்கள், மாற்று மொழித் திரைப்பட விசிடிகள் மற்றும் கார்ட்டூன் விசிடிக்களையும் விற்க முடியாமல் தவித்து வருவதாகவும் இவர்கள் தரப்பு கூறுகின்றது. இது குறித்து கருத்துத் தெரிவித்த வியாபாரி அருண் என்பவர், "தற்போது கடையைத் திறக்கவே முடியாத நிலை ஏற்பட்டுள்ளதால், அங்கு இருந்த சிடிக்களை எல்லாம் எடுத்துவிட்டு வெறும் கடையில் உட்கார்ந்திருக்கிறோம். அப்படி சிடி இருக்கும் கடைகளில் வீடியோ பைரஸி போலீசார் திடீரென ரெய்டு நடத்தி, எல்லாவற்றையும் அள்ளிச் சென்று விடுகின்றனர். நாங்கள் புது சிடிக்களை விற்பதில்லை என அறிவிப்பு செய்த பின்னரும், எங்களை இம்மாதிரி நடத்துவது வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவதற்குச் சமம் - போலீசார் எடுத்துச் செல்லும் விசிடிகளுக்கு கணக்கும் காட்டுவதில்லை" என்கிறார்.

இக்குற்றச்சாட்டினை மறுக்கும் காவல்துறை இணை ஆணையர் சைலேந்திரபாபு, "ரெய்டு நடத்தவுடன் அக்கடையைச் சேர்ந்தவர்களும் அழைத்துச் செல்லப்படுவார்கள். அப்போது அவர்கள் கண் முன்னர் தான் கணக்கெடுப்பு நடக்கும். ஆகையால் அவர்கள் தருவது தவறான தகவல்" என்கிறார். பர்மா பஜாரில் விற்கப்படவில்லை என்றாலும், இங்கிருந்த வியாபாரிகள் சென்னையின் புறநகர்களுக்குச் சென்று, அங்கு தங்களுடைய வியாபாரத்தை ஜரூராக நடத்தி வருகின்றனர் என்ற குற்றச்சாட்டுக்கு பதிலளித்த பர்மா தமிழர் மறுமலர்ச்சி சங்க பொருளாளர் செல்வராஜ், "அங்கு ஒரு வேளை வீடியோ லைப்ரரிகள் மூலம் நடக்கலாம். அதற்கும் பர்மா பஜாருக்கும் தொடர்பு இல்லை - அவர்களை கைது செய்வதற்கு பதிலாக, குற்றம் எங்கு நடந்தாலும் நாங்கள் தான் குற்றவாளிகள் என்பது போல் நினைத்து வழக்கு போடுவோம் என மிரட்டுவது தேவையற்றது" என்றார் உயர்ந்த குரலில்.

"ஆக, பர்மா பஜாரில் விசிடிக்கள் விற்பனை செய்யப்படாவிட்டாலும் வேறு இடங்களில் நடந்து வருகின்றதுதானே!" என்றதற்கு பதிலளித்த சைலேந்திரபாபு, "சட்டம் கடுமையாக்கப்பட்டிருப்பதாலும், காவல் துறை விழிப்புடன் கண்காணித்து வருவதாலும், சிட்டியில் விசிடி விற்பனை முற்றிலுமாக ஒழிக்கப்பட்டுவிட்டது நீங்கள் கூறுவது போல் எங்கும் இல்லை" என்கிறார்.

"புதிய தமிழ்ப்பட விசிடிக்களுக்கு மட்டும் தானே தடை. பின்னர் ஏன் பழைய விசிடிக்களையும், பிறமொழி விசிடிகளையும் விற்கக் கூடாது என்கிறீர்கள்!" என்றதற்கு, "அனுமதி பெறாத எந்த விசிடியையும் விற்பனை செய்யக் கூடாது. அப்படி விற்றால் அவர்கள் மீது வழக்குத் தொடர காவல்துறை நடவடிக்கை எடுக்கும். ஆனால் அனுமதி உள்ள விசிடிக்கள் விற்பதில் எவ்விதத் தடையும் இல்லை" என்கிறார்.

"கடைகளைத் திறப்பதில்லை என்றால் குடும்பம் எப்படி நடத்துகிறார்கள்? வாடகைக்கு என்ன செய்வீர்கள்? அதற்காக ருசி கண்ட பூனைகளாக இருக்கும் நீங்கள் தான் புறநகர் விசிடி வியாபாரிகளுக்கு உடந்தையாக இருக்கிறீர்கள் என்று சொல்கிறார்களே" என்று கேட்டவுடன் மிகவும் கோபமடைந்த அச்சங்கத்தின் முன்னாள் செயலாளர் காதர் முகைதீன், "உண்மையான குற்றவாளிகள் யாரென்று தெரிந்தும், அவர்களைப் பிடிக்க முடியாமல் நழுவும், அல்லது தினறும் தரப்பினரின் குற்றச்சாட்டு இது. எங்களுக்கு கட்டாயம் விடிவு கிடைக்கும் என்ற நம்பிக்கையில் எங்கள் வியாபாரிகள் மிகுந்த கட்டுக்கோப்புடன் செயல்படுகிறார்கள். ஆகவே எங்கள்மீது தேவையற்ற வீண் பழியைத் தொடர்ந்து சுமத்தாமல், முன்பு எங்களுக்கும், தற்போது புறநகரில் திருட்டு விசிடி விற்பவர்களுக்கும் சப்ளை செய்யும் மொத்த வியாபாரிகளை அரசு கைது செய்ய வேண்டும். அது மட்டுமின்றி எங்களுக்கு பழைய சிடிக்களை விற்பனை செய்ய அனுமதி தரவேண்டும். இது எங்களது தாழ்மையான கோரிக்கை" என்கிறார்.

ஆக திருட்டு விசிடி விற்பனை அதன் பிரதான விற்பனை மையமான பர்மா பஜாரில் நடத்தப்படவில்லை. என்றாலும் வேறொரு முறையில் வேறொரு இடத்திலிருந்து விற்பனை நடந்துகொண்டு தான் வருகிறது. அதன்படி முன்பு சம்பாதித்தவர்கள் தற்போது சம்பாதிப்பதில்லை - புதிய வியாபாரிகள் சம்பாதிக்கத் துவங்கியுள்ளனர். இது எப்படி இருக்கு?

கலை

ராஜன்

ஃபோக்கஸ்

## DYFI செய்வது நியாயமா?

காஞ்சி ஜயேந்திரர் கைது தொடர்பாக DYFI அமைப்பானது, தொடர்ந்து காட்டமான கருத்துகளையும், ஆட்சேபத்துக்குரிய வாசகங்களையும் அவர்களது இயக்க அறிவிப்பு பலகைகளில் எழுதி வருகின்றது. இது தொடர்பாக அந்த அமைப்பின் முக்கிய பிரமுகரும், பெரம்பூர் எம்எல்ஏவுமான மகேந்திரனிடம் மூன்று கேள்விக் கணைகளைத் தொடுத்தோம்:

1. வன்முறையைத் தூண்டும் வகையில் வாசகங்கள் எழுதப்படுவது சரியா?

2. வேலையின்மைக்கு எதிராக DYFI போராடிய போது அதிகம் பேரைக் கவர முடியாததால், தற்போது இவ்விவகாரத்தைக் கையிலெடுத்து பப்ளிசிட்டி தேடுகிறீர்கள் என்கிறார்களே..?

3. மற்ற இளைஞரணிகளிலிருந்து வித்தியாசப் படுத்திக் காட்ட எதையாவது எடுக்க வேண்டும் என்பதற்காக இதனை எடுத்துள்ளீர்களா..?

இதற்கு அவர் அளித்த பதில்-

"வன்முறையைத் தூண்டுவது எங்கள் நோக்கம் கிடையாது. மாறாக இந்து முன்னணி, விஎச்பி போன்ற அமைப்புகள் இதை மத ரீதியாக அணுகி, வன்முறையைத் தூண்ட முயல்வதை நாங்கள் எதிர்க்கிறோம். அவ்வளவுதான். இதை வைத்து பப்ளிசிட்டி தேட வேண்டிய அவசியம் DYFIக்கு இல்லை. நாங்கள் நன்கு வேரூன்றியவர்கள்தான். மற்ற இளைஞரணிகள் இவ்விவகாரத்தைக் கையிலெடுக்கவில்லை என்பதற்காக, நாங்களும் எடுக்காமல் இருக்க முடியாது. இது வித்தியாசப் படுத்திக் காட்டும் முயற்சியும் அல்ல."



கலை



# சின்னூண்டு சினி!

சின்னூண்டு சிலி நாட்டி விருந்து இத்தனைப் படங்களா? ஆச்சரியம்தான். சென்ற வாரம் ஃபிலிம் சேம்பரில் நடைபெற்றது இந்த சிலியன் திரைப்பட விழா. 'ஜூலியோ ஜூலையிலிருந்து தொடங்குகிறான்' என்ற ஒரு குட்டிப்படம். படத்தின் கதை? பெரிய ஜூலியோவுக்கு, பிறந்த குட்டி ஜூலியோவுக்கு 15வது பிறந்தநாள் வருகிறது. சமர்த்தாக கோட்டும் கேக்கும் வாங்கிக் கொடுத்ததோடு நின்றுவிடாமல், தன் குட்டிப் பையனுக்கு ஒரு குட்டிக் காதலியையும் வாங்கிக் கொடுக்கிறார் இந்த அருமை அப்பா. ஏன் என்கிறீர்களா? 15 வயதாகிவிட்டால் பெரிய பைய னாகி விடுவானல்லவா? அதற் காகத்தானாம்.

விடுவானா பையன்? கோட் டையும் கேக்கையும் உதறித் தள்ளிவிட்டு, எந்நேரமும் இந்த குட்டிக் காதலியோடு ஊர் சுற்றக் கிளம்பி விடுகிறான். வீட்டுக்கு வந்து தினமும் பூகோளம் சொல்லிக் கொடுக்கும் வாத்தி யாரை 'ப்பூ' என்று ஊதித் தள்ளிவிட்டு, "நான் பெரிய பைய னாகிட்டேன். சந்தேகமாயிருந்தா அப்பா கிட்ட கேட்டுக்கோ." தன் காதலியே கதி என்று அவளோடு கைகோர்த்துக் கொண்டு மரத்தைச் சுற்றிச் சுற்றி வருகிறான்.

ஒருநாள் "இனி நீ என்னோ டயே இருந்துடு. நாம கல்யாணம் பண்ணிக்கலாம்" என்று வெட்கப் பட்டுக் கொண்டே மழலை மாறாத குரலில் சொல்கிறான், பெரிய மனிதனாகி விட்ட குட்டி ஜூலியோ. அதற்கு அந்தக் குட்டிக் காதலி "அதெல்லாம் முடியாது" என்று சொல்லிவிட, "இனி உன் பேச்சு கா" என்று டூ விடுகிறான். இந்த டூ சரியாக இருபது வினாடிகள் வரை நீடிக்கிறது. பிறகு? மறுபடியும் பழையபடி இருவரும் ஊர் சுற்று கிறார்கள்.

இறுதியில் எதிர்பாராத விதமாக சில பிரச்னைகள் முளைக்க, கொஞ்சம் ஏமாற்றம், நிறைய சோகம் என்று முடிந்து விடுகிறது இந்த சிலியன் படம். படத்தின் காமிரா ஆங்கிள் உண்மையாகவே பயமுறுத்துகிறது. நிறைய க்ளோஸப் காட்சிகள். சிகரெட் பற்றவைப் பதை ஏதோ கொள்ளிக்கட்டை பற்றி எரிவது போல, அவ்வளவு பக்கத்தில் காட்டுகிறார்கள்.

✍ கங்கா






சென்ற வாரம் சென்னை மக்களுக்கு எழும்பூர் - ஹோட்டல் அம்பாஸிடர் பல்லவாவில், ஓர் அற்புத விருந்து கிடைத்தது. அதில் இருந்தவை என்னென்ன தெரியுமா? தேவராஜ் எனும் பத்தொன்பது வயது இளைஞரின் கைவண்ணத்தில் உருவான கண்ணைக் கவரும் ஓவியங்கள்தாம். ஆம், தேவராஜின் பதினெட்டு அற்புத ஓவியங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. குறிப்பாக பஞ்சவர்ணக்கிளி ஓவியத்தில் அவரது திறன் ஒவ்வொரு அங்குலத்திலும் பளிச்சென மின்னியது. இவரது ஓவியங்களுக்கு இவர்



நிர்ணயித்த மதிப்பு ரூ 50 முதல் 100 வரைதான். இக் கண்காட்சி நவம்பர் - 30வரை உண்டு. இன்னொரு முக்கியமான விஷயம் - இந்த தேவராஜ் ஓர் உடல் ஊனமுற்றவர் என்பதுதான். இதுவரை இவரது ஓவியங்களை தரிசிக்காதவர்கள், உடனே புறப்படுங்கள் எழும்பூர் மாண்டியத் சாலைக்கு - திரும்பும்போது மனத்தில் மகிழ்ச்சியும், கையில் அவரது ஓவியத்தில் ஒன்றும் இருக்கும் என நம்புகிறோம்! இவரது தொலைபேசி எண்: 28554117

📷 + ✍ முராரி

# டேஸ்ட்.காம்



"மயிலாப்பூர் வந்து மயிலை கற்பகாம்பாள் மெஸ்னு கேளுங்கோ. அதுக்குப் பக்கத்துலதான் நம்ம வீடு" என்று அடையாளம் சொல்லு மளவுக்கு பிரபலமாயிருக்கும் இருபத்தைந்து வருட மெஸ் ஒன்று சென்னையில் இருப்பதென்றால், அது கபாலீஸ்வரர் கோயில் பின்புற முள்ள மயிலை கற்பகாம்பாள் மெஸ் தான்.

இங்கு டி.என். சேஷன், நாகேஷ், இசையமைப்பாளர் தேவா, 'மெட்டி ஒலி' திருமுருகன் போன்ற பலரும் ரெகுலர் கஸ்டமர்களாக இருக்கிறார்கள் என்று ஆச்சர்யப்படுத்துகிறார், இதைக் கோவில் போல இத்தனை வருடங்களாகக் கட்டிக் காக்கும் ஆர். செந்தூராஜன். தமிழ் நாட்டில் எந்த மெஸ்ஸிலும் காண முடியாதபடி, இங்கு தனியாக ஏசி டைனிங் ஹாலும் உண்டு.

"இது எங்கள் பரம்பரைத் தொழில். வீட்டில் எப்படி உணவு சமைப்பார்களோ, அதே முறையைத் தான் நாங்களும் பின்பற்றுகிறோம். பத்து கிலோ அரிசிக்கு ஒரு கிலோ உளுந்து, 2 கிலோ மைதா என்று தோசை மாவுக்கு இதர ஹோட்டல்களில் சேர்ப்பார்கள். ஆனால் நாங்கள் 3 கிலோ உளுந்து போடுவோமே தவிர, வயிற்றுக்கு, தொண்டைக்குப் பாதகம் செய்யும் எந்தக் குறுக்கு வழிகளையும் பின்பற்ற மாட்டோம்" என்கிறார். சமீபகால ட்ரெண்டுக்கு ஏற்றபடி மாறாமல், இன்னமும் பாரம்பரியமான உணவுகளை இங்கு காணலாம். தினமும் அடை அவியல், தேங்காய்ப் போளி, கீரை வடை, பூசணி அல்வா, கேரட் அல்வா, பாதாம் அல்வா என்று மெனுவிலுள்ளதைப் படிக்கும் பொழுதே மெஸ் அதேதான்!

"இன்னமும் இலையில்தான் உணவு பரிமாறுகிறோம். பொங்கல் மீது நெய் ஊற்றி வழங்குவோம். மற்ற ஹோட்டல்களைவிட சாம்பார், சட்னி எங்களுக்கு அதிகம் பிடிக்கும். ஊத்துக்குளியிலிருந்து வெண்ணெய் வரவழைத்து நாங்களே நெய் காய்ச்சுகிறோம். மாட்டுப் பண்ணையிலிருந்து பால் வாங்கி, நாங்களே காப்பிக் கொட்டைகள் அரைத்து, வழங்கும் டிகிரி காபிக்கு பலர் ரசிகர்கள்" என்று தங்களது சாதனைகளை அடுக்கும் செந்தூராஜன், இத்தனை வருடங்களாக தமது மெஸ்ஸை விரிவு படுத்துவது அல்லது கிளைகள் உருவாக்குவது என எதையும் முயற்சிக்கவில்லை.

"முடியாதுங்க. இத்தனை வருடங்களாகக் கட்டிக் காத்த பெருமை போய் விடும். நான் முழுவதும் என் மேற்பார்வையில் அனைத்தும் செயல்படுவதால், இதற்கு மேல் விரிவுபடுத்தினால் என்னால் கவனிக்க முடியாமல் போய் தரம் குறைந்திடும்" என்பவரைப் பார்த்து இந்த வியாபாரப் பிசாசு பிடித்த இவ்வுலகில், இவராவது தரம், பாரம்பரியம் நிலை நாட்டுகிறாரே என்று பெருமைப்பட்டுக் கொள்ளலாம்.




✍ எழில்

📷 நிக்ஸன்

## வரி விளம்பரம்



## புதுமையும் - பித்தமும்

ஓர் இலக்கிய விமர்சகன் கல விருப்பு வெறுப்பின்றி நேர்மையுடன் செயல்பட முடியும் என்பதற்கு மிகச் சரியான முன்னுதாரணமாக விளங்குபவர் தி.க. சிவசங்கரன்.

தி.க.சி.யின் விமர்சன வீச்சில் காயம் பட்டவர்கள் எண்ணற்றோர். குறிப்பாக புதுமைப்பித்தனையும் மௌனியையும் சொல்லலாம். புதுமைப்பித்தனின் எழுத்துகளில் புதுமையும் பித்தமும் கலந்தே இருக்கின்றன என்றோர் தி.க.சி. சிறுகதை உலகின் பிதா என்று மதிக்கப்படும் ஒருவரை, தி.க.சி. இவ்வாறு விமர்சித்ததற்கு என்ன காரணம்?

புதுமைப்பித்தனின் படைப்புகளில் நம்பிக்கையின்மையும் வறட்சியும் மிகுந்து காணப்படுகின்றன. 'மனிதன் - என்னவொரு கம்பீரமாக இச்சொல் ஒலிக்கிறது' என்று அறிவித்த கார்க்கியின் நம்பிக்கை இவரிடம் இல்லை. பாரதியின் பாடல்களில் பரவிக் கிடக்கும் துடிப்பு இவரிடம் கிடையாது. புதுமைப்பித்தனுக்கு அவருக்குரிய இடம் கட்டாயம் இலக்கிய உலகில் உண்டு. ஆனால் அளவிற்கு மீறி அவருக்கு அளிக்கப்படும் வீர வணக்கம் தேவையற்றது. இதுதான் தி.க.சி.யின் கருத்து.



• தி.க. சிவசங்கரன்

புதுமைப்பித்தனைப் பற்றிய இவரது விமர்சனத்துக்கு ஏராளமான எதிர்வினைகள் அந்நாட்களில் உருவாயின. அதேபோல் அண்ணாதுரையைப் பற்றிய இவரது கருத்துகளும் சூடானவை. சிந்திக்கத்தக்கவை. பல விவாதங்களை எழுப்பியவை.

'புதுமை' எனும் பெயர் கொண்டு எழுதப்படும் அறிவுஜீவித்தனமான படைப்புகள் இவரை அதிகமாகக் கவர்ந்ததில்லை. மௌனி போன்றோரின் கதை மாந்தர்கள் தன்னிலை அறியாதவர்கள்; அதீத குழப்பவாதிகள் என்பது இவர் விமர்சனம். நாம் வாழ்ந்து கொண்டிருப்பது மெய்யான வாழ்க்கையா, அல்லது அதன் நிழலா என்றெல்லாம் தாமும் குழம்பி, வாசிப்பவர்களையும் குழப்புவதே இவர்களது வேலை என்று இடித்துரைக்கிறார் தி.க.சி.

ஏதேனும் பத்திரிகை வாசிக்கும்பொழுது ஒரு நல்ல கதையோ கவிதையோ இவர் பார்க்க நேர்ந்தால், உடனடியாக ஒரு தபால் அட்டையை வாங்கி குறிப்பிட்ட ஆசிரியருக்கு (அவர் மூத்த எழுத்தாளராக இருந்தாலும் சரி, அறிமுக எழுத்தாளராக இருந்தாலும் சரி) தனது பாராட்டுதலைத் தெரிவிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

தி.க.சி.யின் மதிப்புரைகளும், விமர்சனங்களும் சிறந்த ரசனையை வாசகர்களிடையே உருவாக்க வேண்டும் எனும் குறிக்கோளை முன் வைக்கின்றன. சிறந்த ரசனையினால் மட்டுமே, சிறந்த இலக்கியத்தை உருவாக்க முடியும் என்று இவர் திடமாக நம்பினார். செயப்பிரகாசம் குறிப்பிடுவதைப் போல, விமர்சனம் என்று வந்துவிட்டால் தி.க.சி. ஒரு கருணையற்றவராக இருந்து வந்திருக்கிறார். இன்றைய இலக்கியப் படைப்புகளை இந்த கருணையற்றவர் வாசிக்க நேர்ந்தால், நம்மிடையே வெகுவாகப் பரவிக்கிடக்கும் புதுமையையும் பித்தத்தையும் மிகச் சரியாக அடையாளம் காட்டியிருப்பார். அதே போல் பல தபால் அட்டைகளும் இவருக்குத் தேவைப்பட்டிருக்கும்.

✍ மருதன்







'தென்னையைப் பெத்தா இளநீரு, பிள்ளையைப் பெத்தா கண்ணீரு' என்பார்கள். ஆனால் ஆதம்பாக்கத்தைச் சேர்ந்த டோமினிக் சேவியரின் கணக்கே வேறு.

தீக்குச்சியை வைத்து உலகப் புகழ்பெற்ற கட்டடங்களை மாடலாக்குவதைப் பார்த்திருப்போம். ஆனால் டோமினிக் தென்னங்குச்சிகளைக் கொண்டு மாடல்களையும் பல ஓவியங்களையும் உருவாக்குகிறார். அதிலுள்ள அதிசயம்: இவருக்கு கொஞ்சங்கூட வரையத் தெரியாது.

"ஒரு முறை என் நண்பன் திருமணத்திற்காக வித்தியாசமான கிஃப்ட் ஒன்றைத் தர முடிவெடுத்தேன். ஒரு பயிற்சியுமில்லாமல் தென்னங்குச்சிகளால் சர்ச்சின் டவரை வடிவமைத்து பரிசளித்தேன். எல்லோரும் புருவம் உயர்த்தினே, எனக்கும் ஆர்வம் அதிகமாகி விட்டது" என்று முன்னுரை கூறுகிறார் 30 வயது டோமினிக்.

"நான் வடிவமைத்த எந்த கட்டடங்களையும் நேரில் பார்த்ததில்லை. பத்திரிகைகளில் வரும் ஃபோட்டோவைப் பார்த்து நானே அதை முப்பரிமாண வடிவாக ஐடியா செய்து விடுவேன். அதன் பின் ஒரு மாதிரி வரைந்து, அளவுகள் வைத்து என் கைத்திறமையைக் காட்ட ஆரம்பிப்பேன்.

வளைவு டிசைன்களில் பச்சை தென்னங்குச்சியை உபயோகிப்பேன். அதுதான் வளைப்பதற்கு ஏதுவாக இருக்கும். பெவிகால், குயிக்ஃபிக்ஸ் கொண்டு குச்சிகளை இணைப்பதால், வேறு எந்த சப்போர்ட்டும் இல்லாமல் போனாலும் தலைகீழாகக் கவிழ்த்தாலும் கீழே விழாது" என்றவர், தனது மாடல்களை பொருட்காட்சியின் பொழுது வைக்க அரசிடம் அனுமதி கேட்ட பொழுது வாடகையாக பதினெட்டாயிரம் கேட்க, அசந்து போய்விட்டாராம்.

"இதுவரை எதையும் விற்று காசாக்கியதில்லை" என்று கூறும் சேவியருக்கு, தங்கத் தாரகை என்று தலைப்பிட்டு முதல்வர் ஜெயலலிதாவை தென்னங்குச்சிகளால் அற்புதமாக வடிவமைத்திருக்கிறார். அதை நேரில் சந்தித்துக் கொடுத்து அவரின் ஆசி பெற வேண்டுமாம்.

ஜனாதிபதி அப்துல் கலாமுக்கு தன் திறமையை கடிதத்தின் மூலம் வெளிப்படுத்தியதற்கு, அவரும் உடனே பாராட்டுக் கடிதம் அனுப்பியிருக்கிறார். சென்னையில் விரைவில் கண்காட்சி நடத்த வேண்டும். அதை கலாம் நேரில் வந்து சிறப்பிக்க வேண்டும் என்று இப்பொழுதிலிருந்து அதன் கனவுகளில் மூழ்கி வருகிறார் சேவியர்.

📷 ரிச்சர்ட் ✍ செந்தில்




☑ ஐயோ கிருஷ்ணா, பாவம் சின்மயி உங்கள் திருப்பிடம் வசமாக மாட்டிக் கொண்டிருக்கிறார்.
- சீதாதேவி, அயன்புரம்

☑ டைட்டானிக் வஜ்ஜுவதி என் மனதில் ஜிவ்வென்று புகுந்துவிட்டாள்! நான் 'ஜாக்' ஆகிவிட்டேன்!
- சுப்ரமணியம், வளசரவாக்கம்

☑ அங்கே சுற்றி இங்கே சுற்றி இறுதியில் அரசு அலுவலர்களின் குறைகளையும் சொன்னீர்கள் பாருங்கள். அங்கே நிற்கிறது சென்னை ஸ்கேன்.
- மைந்தன், தி.நகர்

உங்கள் கருத்துக்களை chennaiscan@kalkiweekly.comல் மெயிலலாம்.




• பவானி

# எம்.ஜி.ஆர்.க்கு அம்மாவுக்கு நன்றி!

மேட்ச் ஃபிக்ஸிங், பாலிடிக்ஸ் என்று ஆயிரம் ஓட்டைகள் கொண்டாலும் கிரிக்கெட்டை (மட்டும்) ஆயுசு முழுக்கப் பார்த்ததில், விளையாடியதில், நாம் இழந்த மற்ற விளையாட்டுகள் எத்தனையோ. அதிலொன்று கத்திச்சண்டை. சென்ற வாரம் சென்னை நேரு உள்விளையாட்டு அரங்கில் நடைபெற்ற தேசிய ஃபென்சிங் (கத்திச் சண்டை) போட்டியில் பல சுவாரஸ்ய நிகழ்வுகள்.

• கத்திச்சண்டை விளையாட்டில் மணிப்பூர், பஞ்சாப் மாநிலங்கள்தான் முன்னணியில் உள்ளன. தமிழகத்தில் மிகவும் சோம்பேறித்தனமாக, கடந்த இரண்டு வருடங்களாகத்தான் கத்திச் சண்டை விளையாட்டு தமிழக அரசால் மாநகராட்சிப் பள்ளி



• கார்த்திகா

களில் அறிமுகப் படுத்தப்பட்டாலும் தற்பொழுது பேர் சொல்லும்படி முன்னேறியுள்ளது.

• ஆடியன்ஸ் என்று ஒருவரையும் பார்க்க முடியவில்லை. அவரவர் குழுவினரும், மீடியாவுமே பார்வையாளர்கள். ஒரு நேஷனல் லெவல் போட்டி சென்னையில் நடக்கும்போது, பள்ளிப் பிள்ளைகளாவது போட்டிகளைக் காணும்படி செய்திருக்கலாம்.

• இத்தனை ஆண்டுகளாக தமிழ் நாட்டிலிருந்து ஒருவர் கூட நேஷனல் லெவல் போட்டிகளில் தங்கம் வாங்காத குறையை, சின்னஞ் சிறுமி 11வயது பவானிதேவி தீர்த்து வைத்திருக்கிறார். U-14 பிரிவில் இவர் ஜெயித்தது, இதர தமிழக வீரர்களிடையே பெரும் உத்வேகம் அளித்திருக்கிறது. சமீபத்தில் பயிற்சிக்காக பெங்களூரில் கேம்ப் சென்றபோது "நீ சின்னப் பெண், உன்னால் கத்தியை ஒழுங்காகப் பிடிக்கக் கூட முடியாது" என்று திருப்பியனுப்பினார்களாம். இத்தனைக்கும் இவ்விளையாட்டை சென்ற வருடம்தான் கற்றுக் கொள்ள ஆரம்பித்த பவானியின் அடுத்த இலக்கு, 2008 ஒலிம்பிக்ஸில் கோல்டு மெடல். வாரே வாஹ்!

• டீம் ஈவண்ட்டின் போது பஞ்சாப்புக்கும் தமிழ்நாட்டுக்கும் மயிர்க் கூச்செறியும் போட்டி. இறுதியில் 14-14 என்று 'டை'ஆக, இறுதி பாயிண்டில் கேப்டன் கார்த்திகா லாகவமாய் பஞ்சாப் பெண்ணை டச் பண்ணி, டைபல் பாயிண்ட்டை எடுத்தது த்ரில்லிங்கான காட்சி. (வாளோடு வாள் மோதி, சாமர்த்தியமாக எதிராளியை கத்தியால் தொட்டால் தான் இவ்விளையாட்டில் பாயிண்ட் கிடைக்கும்)

• ஆரம்பத்தில் எதிராளியோடு வாள் கோக்கும் போது 'தமிழ் மாதாகி ஜே' என்றுதான் ஒவ்வொரு முறையும் தமிழ்நாடு அணியினர் போட்டியை ஆரம்பிக்கின்றனர்.

• எம்ஜிஆர், எம்என். நம்பியாரும் கத்திச் சண்டை போட்டதில்தான் இவ்விளையாட்டு தமிழ்நாட்டில் பிரபலம் அடைந்ததாக அனைவருமே ஒப்புக் கொள்கிறார்கள்.

• மிகச் சாதாரண குடும்பத்தினர் வந்து படிக்கும் தண்டையார்பேட்டை முருகதனுஷ்கோடி பள்ளியிலிருந்து ஏராளமான திறமைகள் இப்போட்டியில் பளிச்சிட்டது தமிழகத்திற்கே பெருமையான ஒன்று.

ஜெயலலிதா அரசின் பொழுது தான் விளையாட்டிற்கு தகுந்த ஊக்கம், உற்சாகம் அளிக்கப்படுவதாக, 10 வயது வீராங்கனையிலிருந்து கோச் வரை அனைவரும் ஆதரவாகப் பேசுகிறார்கள்.

ஆக வீரப்பன், வீராணம், விடி என தமிழக முதல்வரின் சாதனை வரிசையில் விளையாட்டையும் தாராளமாக சேர்த்துக் கொள்ளலாம் போல.

ச.ந.கண்ணன்

# பொலிட் பீரோ



• சென்னையில் சென்ற வாரம் மூன்று ஜோடிகளுக்கு திருமண விழாவொன்று நடு ரோட்டிலேயே நடந்தது. இதன் மணப் பெண்கள் யார் தெரியுமா? பிரபல அனாதை ஆசிரமம் ஒன்றில் வளர்ந்தவர்கள்தாம். இவ்விழாவில் ஜி.கே. வாசனுடன் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த சர்வ கோஷ்டியினரும் கலந்து கொண்டார்களாம். இது ஒரு அதிர்ச்சி என்றால், தற்போது தமிழக காங்கிரஸ் தலைமையை மாற்றக் கூடாது என இளங்கோவன் தரப்பு அறிவிப்பு செய்து மேலும் அதிர்ச்சியை உண்டாக்கியுள்ளதாம்.

• விடுதலைச் சிறுத்தைகள் அமைப்பின் பெயரை தமிழிலும், ஆங்கிலத்திலும் வி.சி. (V.C.) என்று வருமாறு பதிவு செய்த போதிலும் அக்கட்சியினர் சென்னை சுவர்களை "DPI Reserved" என்று ஆங்கிலப் பெயரில், அதுவும் ஆங்கிலத்திலேயே எழுதி வருகிறார்களாம். தமிழை மீட்கப் போராடுவதாகக் கூறும் அதன் பொதுச் செயலாளர் இதை இன்னும் கவனிக்காதது ஏன் என்று கேள்வியெழுப்பி வருகிறார்கள் தமிழ்மொழி ஆர்வலர்கள்.



• சமீபத்தில் சூர்ய சானலை ஏகத்துக்கு நக்கலடித்த நகைச்சுவை நடிகரை, அந்தச் சானல் கடகட பதிலடி தந்து ரொம்பவும் வெறுப்பேற்றி விட்டதாம். அதுவும் புதுப்புது பட்டங்களாகத்(?) தந்து. இதனால் அவரது செல்வாக்கு உயரும் என்று நினைத்தால், தற்போது விவகாரம் எதிர்மறையாக வில்லங்கம் எடுத்து, முதலுக்கே மோசம் என்ற நிலையை எட்டி விட்டதாம்.

• திமுக. ஆட்சிக்காலத்தில் தொழில் துறைக்கு ஒன்றுமே செய்யப்படவில்லை என்ற ரீதியில் எழுப்பப் பட்ட குற்றச்சாட்டுகளுக்கு பதிலளிக்கும் விதமாக, திமுக. தரப்பு தங்களது தொழில் துறை தொடர்பான நடவடிக்கைகளை மக்களிடம் எடுத்துச் சொல்ல இருக்கிறதாம். இதற்கான பணிகள் முரசொலி மாறன் நினைவு தினத்தன்றிலிருந்து துவங்கும் என்ற பேச்சு அடிபடுகிறது.

• பா.ஜ.க. சட்டமன்ற உறுப்பினர் ஒருவர் சமீபத்தில் 'துப்பாக்கி...' என்ற வார்த்தையை பயன்படுத்திப் பேசியதற்கு அவர்களது தரப்புக்குள்ளேயே எதிர்ப்பு பலமாகக் கிளம்பாததால் அவருக்கு 'சிக்னல்' கிடைத்து விட்டதாகவே கருதி, மேலும் ஆக்ரோஷமாகப் பேசுவார் என்று பேசி வருகிறார்களாம் அவரது ஆதரவாளர்கள். ஆனால் இது எந்த வகையிலும் தங்களுக்கு உதவாது - மாறாக அதன் பலன் எதிரணிக்குத்தான் போகும் என்று எச்சரிக்கை விடுக்கிறார்களாம் அவரது நலன் விரும்பிகள்.

கலை

# பத்தாங்கிளாஸ் காதல் டாக்டர்!

– மிர்ச்சி சிவா

"ஹலோ... மை டியர் பிரெண்ட்ஸ். இந்த நாளை நீங்க கண்டிப்பா என்ஜாய் பண்ணி விரும்பீங்க! நான் தான் காதல் டாக்டர். ஜோ. சூப்பரான சாங்ஸ், வர்ற சூப்பரான ப்ரோகிராம் இது "காதலா காதலா" என இரவு 11 மணிக்கு காதுகளை காதலால் நிறைக்கும் ரேடியோ மிர்ச்சியின் ஜாலி பட்டு சிவாவை ஒரு பகலில் சந்தித்தோம்.

***வாழ்க்கை எப்படி இருக்கு?***

வளவளன்னு பேசறதுக்கும், ஜாலியா உளர்றதுக்கும் சம்பளம். நீங்க கூப்பிடுறீங்களோ இல்லையோ, டெய்லி எல்லோர் வீட்டுக்குள்ளேயும் வந்து பேசறேன். என் குரலைக் கேட்காம நிறையப் பேர் தூங்கறதே இல்ல. இதை விட வேறென்ன சந்தோஷம் இருக்க முடியும்!

***நிகழ்ச்சியில நீங்க வாசிக்கிற காதல் கடிதங்களெல்லாம் உண்மையானதா?***

மிர்ச்சியில அழுக்கும் பையன் நான்தான். ஏன்னா என் டேபிள், அலமாரியிலதான் லெட்டர்ஸ் பைபையா குவிஞ்சிருக்கும். படிக்கக் கேட்கவே வேண்டாம். அத்தனைபேர் லெட்டரையும் வாசிக்க முடியாதுன்னு அவங்களுக்கே தெரியும். 'சிவா நீ நிகழ்ச்சியில வாசிக்காட்டியும் பரவாயில்ல. நாங்க எழுதி அனுப்பிட்டேதான் இருப்போம்'னு சொன்ற நேயர்களோட அன்பை என்னன்னு சொல்ல! அதனால உலகத்திலேயே ரொம்ப சந்தோஷமான ரேடியோ ஜாக்கி சத்தியமா நான்தான்.

***மறக்க முடியாத லெட்டர்?***

"இருட்டா இருக்கிற எங்க வாழ்க்கையில, சின்னதா வெளிச்சம் தந்தது உங்க ப்ரோகிராம்தான். அப்படின்னு நிறைய கைதிங்க சேர்ந்து எழுதி அனுப்பியிருந்தாங்க. சென்ட்ரல் ஜெயில்ல இருந்து! இதை விட பெரிய ரெஸ்பான்ஸ் கிடைக்குமா!

அப்புறம் யு.எஸ்.ல இருந்து பாராட்டி ஒரு பொண்ணுகிட்ட இருந்து மெயில் வந்துச்சு. அரக்கோணத்தைத் தாண்டாத மிர்ச்சி, அமெரிக்கா எப்படிப் போகும்னு பதில் மெயில் அனுப்பிக் கேட்டேன். அந்தப் பொண்ணோட பாய் பிரெண்ட் டெய்லி ப்ரோகிராமை 'ரெக்கார்ட்' பண்ணி அனுப்புவாராம். நான் உளறுவதை என்னாலேயே திருப்பிக்கேட்க முடியாது. அந்தப் ப்ரோகிராமை அவங்க திரும்பத் திரும்ப கேட்பாங்களாம்... இதுக்கெல்லாம் கடவுளுக்குத்தான் நன்றி சொல்லணும்.

***காதல் டாக்டர்னு ஏதேதோ காதல் பிரச்சனைகளைத் தீர்க்கறீங்க. சைக்காலஜி படிச்சிருக்கீங்களா?***

"பத்தாங்கிளாஸ் வரைக்கும் படிச்சிருக்கேன். அதுக்கு மேல படிக்க மூளை வேணும்னு சொன்னாங்க. எனக்கில்ல படிக்கல. அப்புறம் மாடலிங், தியேட்டர் ஆர்ட்டிஸ்ட்னு வாழ்க்கை போச்சு. இப்ப மிர்ச்சி குடும்பத்துல ஆர்ஜே. கிரியேட்டிவிட்டி இருந்தாப் போதுமே! அதிகப் படிப்பு அவசியமில்லையே, என்ன கரெக்ட் தானே!

***கிரியேட்டிவிட்டி ரோட் அப்படி என்ன நிகழ்ச்சி பண்றீங்க?***

"மௌண்ட் ரோடு தேனாம்பேட்டை சிக்னல். காலைல 10 மணி. ஒரு பாட்டி, ஒரு மாடு எதிரெதிர்த் திசையில இருந்து கிராஸ் பண்றாங்க. ரெட் மாறி க்ரீன் விழுந்திடுச்சு. வண்டியெல்லாம் கிளம்ப ஆரம்பிச்சிடுச்சு..." அப்படியே நிறுத்தி ஒரு பாட்டுப் போடுவோம். ஞாயிறு 'மிர்ச்சி டாக்கீஸ்' ப்ரோகிராம்ல. இப்ப எல்லோர் மனசிலயும் ஒரு பாட்டி, மாடு தெரியும். ரேடியோவில படம் காட்டுற நிகழ்ச்சி அது. பாச மீப்பவர்ஸ், அடுத்த வீட்டு பஸ் - இப்படி நிறையப் படம் ஓட்டியிருக்கேன்.

***மிர்ச்சி தவிர வேற எங்கெல்லாம் வலையை விரிச்சி வைச்சிருக்கீங்க?***

'ஜோக்கர்'னு ஒரு ஷார்ட் ஃபிலிம் நடிக்கிறேன். ஸ்கிரிப்ட் நான்தான். டைரக்ஷன் 'நிராதிபோஸ்'னு ஒருத்தர். ஒரு மணி நேரம் ஓடும் காமெடியான படம். 'spoof'னு சொல்லலாம். அது போக நிறைய திட்டங்கள் இருக்கு. பார்க்கலாம்.

***நிஜமதி காதல் டாக்டர் யாரு?***

அவங்க யாரு?

***இதுவரைக்கும் இல்லையா!***

இருக்காங்க. அட்ரஸ் தெரியலை.

***காதல் டாக்டரின் காதல் அட்வைஸ்...***

லவ்வர்ஸ்... உங்களுக்குள்ளே சண்டை போட்டா 'சாரி' அப்படிங்கிற சின்ன வார்த்தையை சொல்லிப்பாருங்க. பிரச்னை தீரும். அதே மாதிரி மன்னிப்பு என்பதை விட பெரிய தண்டனை எதுவுமே கிடையாது.

✍ முகில்




ஸ்பிரிட் என்று எழுதியிருந்தார்கள். அதற்கு கீழே ஒரு குளிர்சாதனப் பெட்டியின் புகைப்படம். பனி என்று எழுதி அதற்கு கீழே ஒரு தொலைக்காட்சியின் புகைப்படம். அடுத்து வாஷிங் மெஷின். புகைப்படத்தில் இருந்ததோ ஒரு சிறுமி. ஏன்? இவள்தான் வீட்டில் உள்ள துணிகளைத் துவைப்பவளாம். அடுத்த கவிரொட்டியில், "சிறு அறிவு கூட அபாயகரமானது" என்று எழுதி, கீழே வீடு பெருக்கும் ஒரு சிறுவனின் புகைப்படத்தை வைத்திருந்தார்கள்.

குழந்தைகள் மீதான பலாத்காரம், வன்முறை, ஒடுக்குமுறை இவற்றை எதிர்த்து பிரசாரம் செய்து வரும் 'துளி' எனும் அமைப்பு நவம்பர் 19ம் தினத்தை 'உலக குழந்தைகள் பலாத்கார எதிர்ப்பு நாளாக' ஸ்பென்ஸர் ப்ளாசாவில் அரங்கேற்றியது. நிகழ்ச்சியின் ஒரு பகுதியாக மேலே குறிப்பிட்டதைப் போன்ற சிந்தனையைக் கிளறிவிடும் பல கவிரொட்டிகள் பார்வைக்காக வைக்கப்பட்டிருந்தன. குழந்தைகள் மீதான பாலியல் பலாத்காரத்தைப் பற்றிய சில குறும்படங்களையும் திரையிட்டார்கள். சுமார் 40 சதவிகித குழந்தைகள் தங்களது 18வது வயதிற்குள் பல்வேறு ஒடுக்குமுறைக்கு ஆளாகிறார்களாம்.

கறுப்பு நிற உடையணிந்து வெள்ளை முகச்சாயம் பூசிய பெண்கள், அழகாக தலையை ஆட்டி ஆட்டி குழந்தைகள் போல ஒரு நடனம் ஆடி "குழந்தைகளை உதாசீனப்படுத்தாதீர்கள். அவர்களுக்கும் உணர்வுகள் உண்டு. அவற்றை மதிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள். இதைவிட அழுத்தமாக தான் சொல்ல வந்த கருத்தை அவர்கள் சொல்லியிருக்க முடியாது.

இங்கு வந்த பலர் தெரிந்து கொண்டது இதைத்தான். அமைதியுடன் இருப்பது அவசியம். ஆனால் நம் கண்கள் முன்னால் ஒரு குழந்தை உதாசீனப்படுத்தப்படும் பொழுது அத்தகைய அமைதி பயன் அளிக்காது.

✍ இன்பா

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 *
Registered as a Newspaper in Sri Lanka Supplement to the Kalki issue Dated 28.11.2004

அடக்க விலை ஜவுளி கிடைக்குதம்மா - சாரதா'ஸ்
தரத்தப் பார்த்து மனசு நிறையுதம்மா
தலைமுறைகள் போற்றும் சாரதா'ஸ் - மூன்று
தலைமுறைகள் சேரும் சாரதா'ஸ் ...




45,என்.எஸ்.பி. ரோடு, திருச்சி-2. போன்:2702077.
தன்பில்டிங்,827,மவுண்ட்ரோடு,சென்னை-2,போன்:2852177.